# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை



சிலம்பு-௫௫] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௧, மார்கழி. Jan. 81 [பரல்- ௫

## 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. மொழிப் பேரறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர், எம்.ஏ.
இயக்குநர், தமிழ்நாட்டரசுச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம், சென்னை-8

உ. செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
முனைவர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப்.லிங்., பி.எச்.டி., மாயூரம்.

ங. முனைவர் ச. வே. சுப்பிரமணியம், எம்.ஏ., பி.எச்.டி.
இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை.

ச. பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி. எம். ஏ.
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

ரு. புலவர் இரா. இளங்குமரன், தலைமைத் தமிழாசிரியர்,
மு. மு. உயர்நிலைப்பள்ளி, திருநகர், மதுரை-6.

சிறப்பாசிரியர்: தாமரைச்செல்வர் வ. சுப்பையா.

---

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௫ | திருவள்ளுவர் ஆண்டு ௨௰௧௧, மார்கழி சனவரி 1981 | பரல் ௫ |
|---|---|---|


## உலகத் தமிழ் மாநாடு

ஐந்தாவது உலகத் தமிழ் மாநாடு, கூடல் மாநகரெனப்படும், சங்கத் தமிழ் வளர்த்த மதுரைமாநகரில் சீருஞ்சிறப்புமாக, இது காறும் நடைபெற்றிராத அளவு பெருஞ்செலவிலும், பெருமளவிலும் வண்ணவிழாவாக, சனவரி 4ஆம் நாள் துவங்கி 10ஆம் நாள் முடிய நடைபெற்றதை நாடறியும், நானிலம் அறியும்.

உலகத் தமிழ் மாநாடு என்பது அறிஞர்கள் கூடி கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்ளவும், தமிழ்மொழி—தமிழினம்—தமிழ் நாடு ஆகியவற்றின் வளர்ச்சிக்கும் மேன்மைக்கும் வழிவகை காணவும் உலகளாவிய பெருநோக்குடன் வகுக்கப்பட்டதொரு திட்டமாகும். தனிநாயக அடிகளின் தனிப்பெருமுயற்சியால் இத் திட்டம் இன்றைக்கு 30 ஆண்டுகட்கு முன்னர் உருவாக்கப்பட்டது.

எனவே, இதுகாறும் அயல்நாடுகளில் நடைபெற்ற இம் மாநாடுகள் இக்குறிக்கோள்கட்கு முதன்மை தந்து கருத்தரங்குகள் நடத்தும் அளவோடு நடைபெற்றன. பேரறிஞர் அண்ணு அவர்கள் தமிழக முதல்வராக இருந்தபோது நடைபெற்ற இரண்டாவது உலகத் தமிழ் மாநாடு சற்று விரிவான அடிப்படையில் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளித்துப் பொதுமக்கட்குத் தமிழுணர் வூட்டும் வகையில் நடைபெற்றதை நாடு அறியும். அம் மாநாடு பற்றிய செய்திகளையும் ஈண்டு நினைவு கூர்வோம்.

### இரண்டாவது உலகத் தமிழ் மாநாடு

இரண்டாவது உலகத்தமிழ் மாநாட்டினையொட்டித் தமிழ கத்தின் தலைநகராம் சென்னையின்கண் தமிழகத்தின் தலைசிறந்த

அறிஞர்கள், புலவர்கள், சான்றோர்களின் சிலைகள் முறையே 1-1-68 லும் 2-1-68 லும் திறக்கப்பட்டன. தமிழக முதலமைச்சர் மாண்புமிகு அறிஞர் அண்ணாதுரை அவர்களின் உருவச்சிலை அண்ணாசாலையில் 1—1—68 இல் டாக்டர் சர். ஏ. இராமசாமி முதலியார் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. இவ் விழாவிற்குக் கல்வி அமைச்சர் மாண்புமிகு நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையேற்க அமைச்சர் மு. கருணாநிதியவர்கள் தமிழக அரசின் சார்பில் சிலையை ஏற்றார்.

இரண்டாம் நாள் நிகழ்ச்சி 2—1—68இல் திருவல்லிக்கேணி கடற்கரையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. அப்போது திருவள்ளுவர், ஔவையார், கம்பர், ஜி. யு. போப், கால்டுவெல், பாரதியார், பாரதிதாசன், வ. உ. சிதம்பரனார், வீரமாமுனிவர், கண்ணகி ஆகிய பதின்மருக்குச் சிலைகள் நிறுவப்பெற்றன.

கலைக் காட்சி:

மாநாட்டினை யொட்டிச் சென்னைப் பல்கலைக் கழகத் தேர்வு மண்டபதத்ல் நிறுவப்பட்ட கலைக் காட்சியினை மூதறிஞர் இராசாசி அவர்கள் திறந்து வைத்தார். பொருட்காட்சி மலரினைத் தமிழக முதல்வர் அறிஞர் அண்ணா அவர்கள் வெளியிட்டார். இக் கலைக் காட்சியினை அமைக்கும் பொறுப்பு திரு. சா. கணேசன் அவர்களைத் தலைவராகவும் திரு. இரா. முத்துக்குமாரசாமி எம்.ஏ., பி.லிப், திரு. இரா. நாகசாமி ஆகியவர்களைச் செயலாளராகவும் கொண்ட குழுவிடம் விடப்பட்டது. அடையாறு நூல் நிலையம், பிரிட்டிஷ் கௌன்சில், மறைமலையடிகள் நூல் நிலையம் போன்றவற்றிலிருந்தும் தனிப்பட்டவர்களிடமிருந்தும் கிடைத்த அரிய நூல்களும் அரிய கலைப் பொருள்களும் காட்சியில் வைக்கப்பட்டன.

மாநாட்டுத் துவக்க விழா:

3—1—68இல் இரண்டாவது உலகத்தமிழ் மாநாட்டின் துவக்கவிழா தீவுத் திடலில் சீரும் சிறப்பும், ஏற்றமும் எழிலும் மிக்க பெருவிழாவாகத் துவங்கியது. விழாவினை யொட்டி மாபெரும் ஊர்வலம் ஒன்று சென்னைத் தீவுத் திடலில் இருந்து புறப்பட்டு நகரின் பெருஞ் சாலைகளைக் கடந்து திருவல்லிக்கேணி கடற்கரைச் சாலையை அடைந்தது. இவ் வூர்வலக் காட்சி வண்டிகள் பண்டை வரலாற்றினை நினைவூட்டும் வகையில் அமைந்திருந்தன.

இந்தத் துவக்கவிழாவில் மாண்புமிகு அறிஞர் அண்ணா அவர்கள தலைமை தாங்கினர். மாண்புமிகு திரு. காமராசர் அவர்கள்

வரவேற்புரை நிகழ்த்தினர். இந்தியக் குடியரசுத் தலைவர் சாகிர் உசேன் அவர்கள் துவக்க உரை நிகழ்த்தினர்.

கருத்தரங்கு :

உலகத் தமிழ் மாநாட்டினை யொட்டி நடைபெற்ற சிறப்புக் கருத்தரங்கில் பல்வேறு நாட்டு அறிஞர்கள் சிறப்புக் கட்டுரைகள் பலவற்றைப் பல தலைப்புகளில் வெளியிட்டுப் பேசினர். இக் கருத்தரங்கு சென்னைப் பல்கலைக் கழக நூற்றாண்டு விழா மண்டபத்தில் நடைபெற்றது. ஆராய்ச்சியாளர்கள் 6 பகுதியினராகப் பிரிந்து ஆராய்ச்சி செய்தனர்.

பல்கலைக் கழக நூற்றாண்டுவிழா மண்டபத்தில் நடைபெற்ற உலகத் தமிழ்க் கருத்தரங்கில் மேலை நாடுகள் பலவும் மலேசியா, சிங்கப்பூர், இலங்கை போன்ற கீழை நாடுகளும் பங்கு கொண்டன.

மாநாட்டின் சிறப்பு நிகழ்ச்சிகள்

இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டின் பயன்மிக்க பல செயல்களுள் முதன்மையாகக் குறிப்பிடத்தக்கது, சென்னை, அண்ணாமலை, மதுரை ஆகிய மூன்று பல்கலைக் கழகங்கட்குத் திருக்குறள் ஆராய்ச்சிக்கென நிதி வழங்கியதாகும். இதில் ஒவ்வொரு பல்கலைக் கழகத்திற்கும் முந்நூறாயிரம் வெண்பொற் காசுகளாக மொத்தம் ஒன்பது நூறாயிரம் வெண்பொற்காசுகள் வழங்கப்பட்டன. இந்த உதவியினால் திருக்குறள் பற்றிய அரிய பல ஆய்வு நூல்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

இம் மாநாடு சீரும் சிறப்புமாக ஏழு நாட்கள் நடைபெற்றது. இறுதி நாள் முதல்வர் அறிஞர் அண்ணா அரிய சொற்பொழிவுடன் விழா இனிது முடிந்தது.

ஐந்தாவது மாநாடு:

இப்போது மதுரை மாநகரிலே நடந்து முடிந்த இம்மாநாட்டினால் இதுகாறும் மக்கள் கண்டிராத அளவுக்கு மாநகரமே விழாக் கோலம் பூண்டிருந்தது. நாட்டின் பல்வேறு பகுதிகளினின்று மக்கள் மதுரை வந்து சேர, சோழன்—சேரன்—பாண்டியன் போக்குவரத்துக் கழகங்கள் சிறந்த ஏற்பாடுகளைச் செய்திருந்தன.

மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம், பந்தய மைதானம், தமுக்கம் திடல் ஆகிய இடங்களில் முறையே தமிழ் அறிஞர்கள் ஆராய்ச்சிக் கட்டுரைகள் படிக்கும் இடமாகவும் ஒரேசமயத்தில் 30 ஆயிரம் பேர் அமர்ந்து கருத்தரங்கு—கலைநிகழ்ச்சி ஆகியவற்றைக்

கண்டுகளிக்க வசதியாகவும் பெரிய காவணங்கள் அமைக்கப் பெற்றிருந்தன.

இவையேயன்றி படிநிகராளிகளும் (Representatives) சிறப்பு விருந்தினரும் தங்குதற்கான தனி இடங்களும் ஏற்பாடு செய்யப் பெற்றிருந்தன.

இம்மாநாட்டை யொட்டி மதுரை நகர எல்லைகளில் சேர—சோழ—பாண்டியன் பெயரிலும்; அங்கயற்கண்ணி, நக்கீரர் ஆகியோர் பெயரிலுமாக ஐந்து அழகிய நுழைவாயில்கள் அமைக்கப் பெற்றருந்தன.

பத்து இடங்களில் மொத்தம் 12 தமிழ்ப் பேரறிஞர்களின் சிலைகள் அமைக்கப் பெற்றன. அவற்றை அமைச்சர்கள் திறந்து வைத்தனர். அவை:

தொல்காப்பியர், திருவள்ளுவர், பாண்டித்துரைத் தேவர், ராபர்ட் நொபிலி, வேதநாயகம்பிள்ளை, தனிநாயக அடிகள், ஆறுமுகநாவலர், சோமசுந்தர பாரதியார், திரு. வி. க, வீரமா முனிவர், உ. வே. சாமிநாதஐயர், கவிமணி தேசிய விநாயகம்பிள்ளை ஆகியோரின் சிலைகள் ஆகும்.

குமரிக்கண்டம்—வரலாற்று வண்ணப் படம்

இம் மாநாட்டின் செயல்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது கடல்கொண்ட தென்னாடு பற்றிய வண்ணப்படம் உருவாக்கப்பெற்ற தாகும். இப் படக்காட்சியினை 6—1—81 அன்று மாலை அண்ணல் காந்தியடிகள் அருங்காட்சியகத் திறந்தவெளி அரங்கில் கேரள மாநில முதல்வர் மாண்புமிகு இ. கே. நாயனார் தொடங்கி வைத்தார்.

குமரிக்கண்டம் பழங்காலத் தமிழகத்தோடு நீண்டு பரந்திருந்த தென்னிலப்பகுதியாகும். இச் செய்தியினை முதன் முதலாகத் தமிழக மக்களுக்குத் தெரியப்படுத்தும் வகையில் கழகம், குமரிக் கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு என்னும் ஆராய்ச்சி நூலினைத் தக்க விளக்கப் படங்களோடு 1941 ஆம் ஆண்டிலேயே வெளியிட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும். இந் நூலினை எழுதியவர் பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரை அவர்களாவார்.

அத்துடன் மதுரையில் தமிழ்த் தாயின் சிலையொன்று 15 அடி உயரத்தில் அமைக்கப்பெற்றுள்ளது. இதனை இந்தியத் தலைமை

அமைச்சர் திருமதி இந்திராகாந்தி அவர்கள் 10—1—81 இல் திறந்து வைத்தார்கள்.

அத்துடன் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் அவர்களுக்கும், முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப்பிள்ளையவர்களுக்கும் பரிசலித்துப் பாராட்டிச் சிறப்பித்தார்கள்.

தமிழ் மாநாடு சார்பாக இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ் விருந்து—கலைக் கண்காட்சி—கருத்தரங்கு—கவியரங்கு—பட்டிமண்டபம்—வழக்காடுமன்றம் என்றின்ன பிற சிறப்பு நிகழ்ச்சிகளும் ஊர்வலம், திரைப்படக் காட்சி ஆகியனவும் நடந்து மாநாடு மிகமிகச் சிறப்பாக நிறைவுபெற்றுள்ளதை நினைத்து மகிழ்ச்சி அடைகிறோம். இம்மாநாட்டினை இத்துணைச் சிறப்பாக நடத்திய தமிழக அரசினையும், ஆதரவு நல்கிய மாண்புமிகு முதல்வர் ம. கோ. இராமச்சந்திரன் அவர்களையும் அவர்களுக்குத் துணை நின்ற விழாக் குழுவினரையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

இந்த ஏழு நாள்களிலும் நம்நாட்டுப் பேரறிஞர்களும்—அயல் நாட்டுப் பேரறிஞர்களும் மிகப்பல சீரிய கருத்துக்களை வழங்கியுள்ளனர். அவ்வபற்றியும், விழா நிகழ்ச்சிகள், கலைக்காட்சிகள் பற்றியும் விரிவாக எழுதுவதென்றால் இவ்வேடு இடங்கொள்ளாது. எனவே, விரிவான செய்திகளை முறையாக—அழகாக அடுத்த இதழில் எழுதலாமெனக் கருதி இவ்வளவோடு நிறுத்துகின்றோம். வாழ்க தமிழ்! ஓங்குக தமிழ்ப் பண்பு!

வளர்க உலகத் தமிழ் மாநாடுகள்! வெல்க தமிழினம்!

———

## திருக்குறட் சிறப்பு

எத்தனை நூல் கற்றாலும் எப்பொருளை ஆய்ந்தாலும்
அத்தனைக்கும் ஆன்ற பெருமைதரும்—மெய்த்ததமிழ்
வள்ளுவர் மாநிலத்து மக்களெல்லாம் மாறின்றிக்
கொள்ளவுளம் தந்த குறள்.

—உரைவேந்தர் ஒளவை. சு. துரைசாமிப் பிள்ளை

# *உலகளாவிய தமிழ் மாநாடு

[இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.

*செயலாளர் கருத்தரங்கு உட்குழு*]

"தேமதுரத் தமிழோசை தெருவெல்லாம் செழிக்கச் செய்வீர்" என்ற மகாகவி பாரதியாரின் வாக்கைச் செயல்படுத்தும் வகையில், தமிழோசையைத் தரணி முழுவதும் பரப்பும் பணியில் ஈடுபட்டுள்ளது உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம். அஃதோர் அனைத்துலகத் தமிழர்களின் அமைப்பு. அதன் முதன்மையான குறிக்கோள், தமிழ் தனக்குரிய இடத்தை உலக மொழிகளின் இடையில் பெறவேண்டும் என்பதுதான். அதற்காகவே இம்மன்றம் உலகின் பல்வேறு பகுதிகளில் பணியாற்றும் பேராசிரியர்களை அவ்வப்போது ஒன்றுகூட்டிக் கருத்தரங்கு நடத்தி ஆய்வுரைகளை வழங்கச் செய்து வருகின்றது. இம் முயற்சிக்கு வித்திட்டவர் இலங்கைப் பேரறிஞர் தவத்திரு தனிநாயக அடிகளார். அவருக்கு இதில் துணை நின்றவர் திரு. ஏ. சுப்பையா அவர்களாவர்.

தனிநாயக அடிகளார் உலகநாடுகள் முழுவதையும் சுற்றும் பேறு பெற்றவர். பல்வேறு நாடுகளில் குடியேறியுள்ள தமிழ்மக்களுடன் பழகி அவர்களுடைய தமிழ் உணர்வைத் தட்டி எழுப்பியவர். 'ஒன்றே உலகம்' என்ற அவர்தம் நூல் அவருடைய பயணங்களைச் சுவையாகக் கூறுகின்றது.

முப்பது ஆண்டுகளுக்கு முன்னர்த் தமிழ்ப் பண்பாடு (Tamil Culture) என்ற அரிய ஆங்கில இதழை நடத்தி வந்தார். மேனாட்டறிஞர்கள் தமிழ் ஆய்ந்திட அவ்விதழ் பெருந் துணை நின்றது.

தனி நாயக அடிகளாரின் தொண்டனைத்துக்கும் துணையாக நின்றவர் திரு. ஏ. சுப்பையா அவர்களாவர். இவர் வங்கித்துறை அமைப்புகளில் தலைமைப் பொறுப்பிலிருந்து பணியாற்றியவர். மேலைநாட்டு மொழியியல் அடிப்படையில் தமிழை ஆய்வு செய்யும் அறிஞர்களில் குறிப்பிடத்தக்கவர். இவரால் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட கட்டுரைகள் 'Languages' என்ற புகழ் பெற்ற மொழியியல் இதழில் வெளிவந்துள்ளன. தமிழ்மொழி உலக

---

*கல்கி 4—1—81 இதழில் வெளிவந்த கட்டுரையின் சுருக்கம்.

மொழிகள் அனைத்துக்கும் தாய்மொழியாக இருந்திருக்க வேண்டும் என்பது இவரது உறுதியான நம்பிக்கை.

தனிநாயக அடிகளார், திரு ஏ. சுப்பையா ஆகிய இவ்விருவரின் அரிய முயற்சியால் 1966இல் மலேசியாவில் முதல் உலகத் தமிழ் மாநாடு நடைபெற்றது. தொடர்ந்து சென்னை (1968), பாரிஸ் (1970), இலங்கை (1973) மாநாடுகள் நடை பெற்றன.

தென்மேற்கு ஆப்பிரிக்க நாடான செனகல் நாட்டுக் குடியரசுத் தலைவர் டாக்டர் லியோபோல்டு செங்கோர் அவர்கள் ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டைத் தமது நாட்டில் நடத்தத் திட்டமிட்டிருந்தார். ஆனால், தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் அறிஞர் சிலர் வழி டாக்டர் செங்கோர் அவர்களை அணுகி ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டைத் தமிழகத்தில் நடத்த இசைவு கேட்டுப் பெற்று, அதனை மதுரைமா நகரில் சிறப்புற நடத்தி வருகிறார்.

பொதுவாக, இம் மாநாடு 'உலகத் தமிழ் மாநாடு' என்று அழைக்கப் பட்ட போதிலும் உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்தைப் பொறுத்த வரை 'மாநாட்டுக் கருத்தரங்கு' என்று தான் பொருள் படும். இதுகாறும் அயல்நாடுகளில் நடைபெற்ற இம் மாநாடுகள் 'கருத்தரங்கு' என்ற அளவில்தான் நடைபெற்றன. 1968இல் சென்னையில் நடைபெற்ற மாநாட்டிலே தான் பேரறிஞர் அண்ணா அவர்கள் தமிழ் மக்கள் பெரும் அளவில் கலந்து கொள்ளும் பொருட்டுத் தமிழ்ப் பண்பாட்டின் பெருமையை விளக்கும் வகையில் கண்ணையும் கருத்தையும் கவரும் ஊர்வலம், சிலைகள் அமைத்தல், கலை நிகழ்ச்சிகள் ஆகியவற்றை இடம்பெறச் செய்தார்கள். அவ் வகையில் இந்த ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டிலும் பல கலைநிகழ்ச்சிகள், ஊர்வலம், கருத்தரங்கு, கவியரங்கு, பட்டி மண்டபம், சிந்தனை மேடை, வழக்காடு மன்றம் போன்ற பல சிறப்பு நிகழ்ச்சிகளும் இடம் பெறுகின்றன. இதன் தொடர்பாகக் கண்காட்சி யொன்றும் நடை பெறுகின்றது. 'கடல் கொண்ட தென்னகம்' பற்றிய திரைப்படமும் தமிழக அரசினரால் வெளியிடப் படுகிறது.

———

# தமிழும் திராவிடர்களும்

[திரு. ஆ. சுப்பையா,

அமைப்பாளர், உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம்]

(தமிழாக்கம்: இரா. முத்துக்குமாரசாமி)

[தமிழ் உலகளாவிய மொழி. உலக மொழிகட்கெல்லாம் மூத்த மொழி. தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட இனம் திராவிட இனம். இக் கருத்துக்களை அயல் நாட்டு வரலாற்று அறிஞர்கள் பல்வேறு திருப்பங்களினின்று ஆராய்ந்து கூறுகின்றனர். இக் கருத்துக்களை திரு. ஆ. சுப்பையா அவர்கள் தொகுத் தெழுதிய ஆங்கிலக் கட்டுரையினைத் திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் தமிழாக்கம் செய்துள்ளனர். அது கல்கி 4-1-81 இதழில் இடம் பெற்றுள்ளது. விரிவஞ்சி அதன் சுருக்கத்தினை மட்டும் கீழே தருகிறோம்.]

உலகில் இன்று வழக்கில் இருக்கும் மொழிகளில் தமிழ் மிக மூத்த மொழி. வரலாற்றின் மிக அண்மைக் காலக் கண்டு பிடிப்புகள் சரியாக இருக்குமானால், இந்தோ ஐரோப்பிய மொழிகள் உட்பட உலக மொழிகள் அனைத்துக்குமே தமிழ்தான் முதலில் தோன்றிய மொழி என்று கொள்ளலாம். திராவிடர்கள் உலக அறிஞர்களுக்கு இன்று பெரும் பிரச்சினையாக உள்ளனர். அவர்கள் தோன்றிய தாயகம், என்று எந்த நாட்டையும் அறிஞர்களால் சுட்டிக் காட்ட இயலவில்லை. ஐரோப்பாவின் வடகோடிப் பகுதியில் உள்ள பின்லந்திலிருந்து உலகின் தென் கிழக்குக் கோடியிலுள்ள ஆஸ்திரேலியா வரை திராவிடர் தொடர்புகள் இருந்தன என்பதற்கான சான்றுகள் கண்டு பிடிக்கப் பட்டுள்ளன.

'இண்டோ - ஏசியன் கல்சர்' என்னும் அரசுச் சார்பு நிறுவன வெளியீடொன்றில் பேராசிரியர் எஸ். கே. டே என்ற சமக்கிருதப் பேராசிரியர் குறிப்பிடுகிறார்:

"உலகில் புதிர் நிறைந்த மக்களாகத் திராவிடர்கள் உள்ளனர். நம்மால் எதையும் துணிந்து கூற இயலவில்லை.

“இன்று அவர்கள் தென்னிந்தியாவில் நிலையாகக் குடியிருப்பினும் ஒரு காலத்தில் பலுச்சித்தானத்திலிருந்து வங்காளம் வரை பரவியிருந்தார்கள் என்பதற்குப் போதுமான மொழியியல் மற்றும் பிற சான்றுகள் உள்ளன.”

“1974 இல் மாஸ்கோவிலுள்ள புரோக்ரஸ் பப்ளிஷர்ஸ் வெளியிட்ட “முப்பெருங் கடல்களின் புதிர்கள்” என்ற நூலில்; ...சரியாகச் சொல்ல வேண்டுமானுல் அவர்களுடைய வரலாற்ருசிரியர்கள் “நாவலந்தீவின் தென்கோடிப் பகுதியே தமிழர்களின் தாயகம்” என்று நம்புகிருர்கள். நில நடுக் கோட்டினை யொட்டி முதன்முதல் தோன்றிய நிலப்பகுதியில் நாவலந் தீவும் அடங்கும். மனித நாகரிகத்தின் தொட்டில் என்று கருதப்படும் லெமூரியா என்பதும் அதே பகுதியைச் சார்ந்ததுதான். மிக வியப்புக்குரிய செய்தி என்னவெனில் உலகிலுள்ள மிகப் பழைய நாகரிகங்களை ஆராயும்போது பல புதிர்கள் எழுகின்றன. ஆனுல் அவை அனைத்தும் லெமூரியா என்ற விடையைக் கொண்டனவாகவே இருக்கின்றன. லெமூரியா, மனித நாகரிகத்தின் உயர்நிலையை அடைந்த மக்கள் வாழ்ந்த பகுதியாகும்.”

“வரலாற்றுக்கு முற்பட்ட மிகப் பழைமையான இந்து இந்தியா” என்னும் நூலுக்கு முகவுரை எழுதுகையில் டொனல்ட் மெக்கன்சி குறிப்பிட்டுளது:

சிந்து வெளிக்கு ஆரியர்கள் வருவதற்குப் பல நூற்ருண்டுகளுக்கு முன்னரே, அங்கு ஆரிய நாகரிகத்துக்கு முற்பட்ட பழம்பெரும் நாகரிகம் நிலவி வந்தது என்ற உண்மை நிறுவப்பட்டுள்ளது.

“இந்திய நாகரிகத்தை உருவாக்கியவர்கள் திராவிடர்கள் தாம்” என்ற உண்மையை நிலை நாட்டி வரலாற்றில் அவர்களுக்குக் கிடைக்க வேண்டிய உரிய இடத்தை மீண்டும் பெற்றுத் தந்தது தான் மிகச் சுவையான செய்தியாகும்.

“சோவியத் ஆய்வாளர்கள் பலர் கம்ப்யூட்டர்களைப் பயன்படுத்திச் சிந்துவெளி எழுத்துக்களைப் படிக்க முயன்றனர். ஆனுல் வெற்றி பெறவில்லை. இறுதியாகத் திராவிட மொழி ஒன்று மட்டுமே அந்தப் பண்டைய இந்திய மொழியுடன் ஒத்துள்ளது என்பதைக் கண்டு பிடித்துள்ளனர்” என்று கோந்தரதோவ் எழுதியுள்ளார்.

'திராவிடர்களின் தோற்றமும் மேற்கும்' என்ற நூலில் டாக்டர் வகோவரி என்பவர், திராவிட மொழிகளுக்கும் பிரான்சுக்கும் ஸ்பெயினுக்கும் இடையேயுள்ள எல்லைப் பரப்பில் வாழும் மக்கள் பேசும் இந்தோ - ஐரோப்பிய மொழியான பாசக் மொழிக்கும் தொடர்புள்ளது என்று எழுதியுள்ளார். அங்ஙனமே, ஆஸ்திரேலியாவின் பழங்குடி மக்களுக்கும் திராவிடர்களுக்கும் தொடர்புள்ளது என்று முப்பெருங்கடல்கள் என்னும் நூலில் கோந்தரதோவ் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு உலகின் பல்வேறு பகுதிகளில் வழங்கும் மொழிகளுடன் தமிழ் இவ்வளவு பரந்த அளவில் உறவு கொண்டிருக்கிறது எனில், உலக மொழிகள் அனைத்துமே தமிழிலிருந்துதான் தோன்றின என்று உறுதியாகக் கூறலாம்.

---

## நந்தமிழிலன்றி வேறெம்மொழியிலேனு முளவோ?

*மொழியின் அமைப்பையும் மக்களினியற்கை உலக இயற்கைகளையுந் திறம்பட விரித்துரைத்த தொல்காப்பியம் போன்ற மிகப் பழைய நூல நமது செந்தமிழிலன்றி வேறு மொழிகளிற் காணல் இயலுமோ? அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளையும் முற்றும் எடுத்து விளக்கும் திருக்குறள், நாலடியார் போன்ற அரும்பெரும் நூல்களை நம் செந்தமிழ் மொழியிலன்றி வேறெந்த மொழியும் உடையதாமோ? உலகவியற்கை பிறழாது பாடிய பத்துப்பாட்டு, கலித்தொகை முதலான பழைய தமிழ்ப் பாட்டுகளுக்கு நிகரானவை வேறெந்த மொழியிலேனும் எடுத்துக்காட்டல் இயலுமோ! சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் பெருந் தமிழ்க் காப்பியங்களோடு ஒத்தவை எம்மொழியிலேனும் உளவோ!*

—மறைமலையடிகள்

*அறிவுரைக் கொத்து, பக்கம் கூ௬*

# தமிழிலக்கியத்தில் கூறப்பட்டுள்ள செடிநோய்கள்

[திரு. பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

நீலகேசிக்குச் சிறந்த உரையெழுதிய சமயதிவாகரர் சில அரிய அறிவியற் செய்திகளைக் கூறியுள்ளார். செடிகளின் நோய்களையும் குறிப்பிட்டுள்ளார். நெல்லுக்கு வரும் பிணியாகச் செம்பை, உகுநை, தாட்புழு என்பவைகளைக் குறிப்பிட்டுள்ளார். செம்பை என்பது பூஞ்சாணத்தால் (Fungus) வரும் நோயாகும். இந்த நோய்கண்ட நெல்லின் தாளில் நீளவாட்டத்தில் நீளமாகச் சிவந்த புள்ளிகள் தோன்றும். இதை Cercospora (leaf spot fungus) என்று அழைப்பர். இதுபோன்றே கரும் பழுப்பு நிறமாக நெல்லின் தாளில் வட்டமாகப் புள்ளிகள் விழுவதுண்டு. இதை Helminthosporium (leaf spot) என்றழைப்பர். இந்த இரண்டு பூஞ்சாணத்தால் வரும் நோய்களையே செம்பை என்று குறிப்பிட்டனர். செம்பு நிறத்தில் நெல்லின் தாளில் புள்ளிகள் விழுவதால் செம்பை என்று பொருத்தமாக இந்த நோய் அழைக்கப்பட்டது. நெற்பயிரை அழிக்கும் முக்கியமான நோய்களில் இஃது ஒன்றாகும்.

உகுநை என்பது நெற்பயிரில் சிலவகைக் கதிரில் இருந்து நெல்லை உகுத்துவிடும் தன்மையைக் குறித்து வழங்கியதாகும். இதை grain shedding என்பர். இதை நோய் என்று கருதுவதில்லை. நெல் அறுவடையாவதற்கு முன்னரே நெல்மணிகள் தரையில் உதிர்ந்து விடுவதால் இழப்பு ஏற்படும். இந்தக் குணமுடைய நெற்பயிர்களைக் கலப்பினமாக்கி நெல்லை உதிர்க்காத பயிர்வகையைக் கண்டுபிடித்துள்ளனர். தாட்புழு என்பது நெல்லின் நடுத்தாளில் ஒருவகைப் புழு புகுந்து நெற்பயிரின் சத்தை உறிஞ்சி இளம்பயிரின் நடுத்தாளையே அழித்துவிடும் நோயாகும். இது நெற்பயிர் பூக்குங் காலத்தில் பதராக்கிவிடும். இதை Stem borer என்ற புழு என்பர். (Stem borer caterpillars bore into the stem near the node and feed on central shoot resulting in dead heart in young plants and white chaffy leaves in flowering plants). இந்த வகையாக நெல்லை அழிக்கும் புழுவையே (Tryporyza incer tulas) தாட்புழு என்று சமயதிவாகரர் கூறியுள்ளார். இந்த மூன்று நோய்களை 13ஆம் நூற்றாண்டிலேயே சமயதிவாகரர் கூறியது போற்றத்தக்கதாகும். அண்மைக் காலத்திலதோன் இந்த நோய்களை இனங்கண்டு தடுப்பு முறைகளைக் கண்டு பிடித்துள்ளனர்.

வெற்றிலைக்கு வரும் பிணியாக நாவேறு, சுருட்டை என்பன கூறப்பட்டுள்ளன. இதில் சுருட்டை என்பது leaf roller என்ற புழுவால் வரும் நோயாகும். இலையைச் சுருட்டவைக்கும் நோயாகும். நாவேறு என்பது வெற்றிலையில் விழும் பழுப்பு, கருப்பு புள்ளிகளைக் குறித்து வழங்கிய பெயராகும். இலை முழுவதும் பழுப்பாகவோ கருப்பாகவோ மாறுவதுண்டு. வெற்றிலை இலை, நாக்குப் போல இருப்பதால் நாவில் ஏறின நோய் என்ற பொருளில் நாவேறு என்று அழைத்தனர். சமயதிவாகரர் நெல்லிற்கும் வெற்றிலைக்கும் வந்த நோய்களை அக்காலத்திலேயே கூறியுள்ளது கவனிக்கத்தக்கதாகும்.

தென்னைக்கு வரும் ஒரு நோயைப்பற்றியும் தமிழிலக்கியம் கூறியுள்ளது.

*''தேரையார் தெங்கிள நீருண்ணூர் பழிசுமப்பர்''*
—பழமொழி நானூறு

*''தெங்குண்ட தேரை படுவழிப் பட்டேன் யான்''*
—முத்தொள்ளாயிரம்

'தேரை போயிற்று என்ருற்போல்வதொரு காய்' என்று நச்சினர்க்கினியர் சீவகசிந்தாமணி உரையில் கூறியுள்ளார். தேரை மோந்த காய் என்று அழைக்கும் வழக்கும் உண்டு. இந்தத் தேரையை 'மண்டூக மகரிஷி' என்று அழைத்தனர். தேங்காய் உள்ளீடு இல்லாமல் போவதுண்டு. இத்தகைய காய்களை ஒல்லிக் காய், ஒல்லி மேய்ந்த காய் என்று அழைப்பர். இந்தத் தேங்காயையே 'தேரை உண்ட தெங்கு' என்று கூறினர். தேரை தேங்காயைத் தின்பதில்லை. ஆனல், 'தேரைமேல் பழியைப் போடுவதால் பழி சுமக்கின்றது' என்று பழமொழி கூறியுள்ளது. இந்த வகைத் தேங்காய் தோன்றக் காரணம் பொட்டாசு என்ற சத்து மண்ணில் போதுமானதாக இல்லாததால் என்று கண்டுபிடித்துள்ளனர். இதைச் சத்துக் குறைவால் தேங்காய்க்கு வரும் நோயாகக் கருதவேண்டும். 'வேழம்உண்ட விளாங்கனி' என்ற வழக்கும் இலக்கியத்தில் வழங்குகின்றது. விளாங்கனி உள்ளீடற்றுப்போவதைக் குறித்து யானையுண்ட விளாங்கனி என்று கூறுவர். யானை உண்பதால் விளாங்கனி உள்ளீடற்றுப் போவதில்லை. விளாங்கனி உள்ளீடற்றுப் போதலும் ஒருவகை நோயினலாகும். இந்த நோய் எதுவென்று தெரியவில்லை.

தமிழிலக்கியத்தில் செடி நோய்களைப்பற்றியும் செய்திகள் காணப்படுவதால் அக்காலத்திலேயே இந்த ஆராய்ச்சியில் பழந்தமிழர் ஈடுபட்டிருந்தனர் என்பது தெளிவாகின்றது.

———

# சாதி மதப் பிரிவுகள்

[திருக்குறள் பீடம், குருகுலம் அழகரடிகள்]

'சாதி' என்னும் பிரிவு உடம்பு வேறுபாட்டால் உண்டாகும். மதம் என்னும் பிரிவு நாடு வேறுபாட்டால் உண்டாகும். சிங்கத்தின் உடல் வேறு, யானையின் உடல் வேறு, மீனின் உடல் வேறு. இவையெல்லாம் வேறு வேருகச் 'சாதி' எனப்படும். 'மீன் வாழ் சாதி' என்ருர் தொல்காப்பியர்; 'கிறித்தவம்' வேறு மதம். 'சைவம்' வேறு மதம். இவையெல்லாம் நாடு பிரிவுகளால் உண்டாவன.

பண்டைக் காலத்தில், 'இந்து மதம்' என்பது இல்லை; சைவ மதமே பின்பு 'இந்து' மதமாயிற்று. சைவம் என்னும் சொல் இருக்கும்போது புதிய பெயர் ஒன்று உண்டாவதில் பொருளில்லை. சைவசமயம் என்றே இந்து சமயத்தைச் சொல்லலாம்.

சிலர், இந்து மதம் என்றே அழைக்கின்றனர். அவர்கள் புதிய வழக்கோடு சேர்ந்து போகிறவர்கள். பழைய வழக்கு மாய்ந்துவிட்டால் அவ்வாறு செய்யலாம்; பழைய வழக்கு இருக்கும்போது, புதிய வழக்கை ஏன் கொள்ளவேண்டும் ?

சமுதாயத்தைக் 'குமுகாயம்' என்று ஒரு புதிய வழக்குக் கொண்டுவரப்பட்டது. சமுதாயத்துக்கு 'மன்பதை' என்னும் தமிழ்ச் சொல் ஒன்று உண்டு. அவ் வழக்கு இருக்கும்போது புதிய வழக்கு ஏன்? சமுதாயத்தை மன்பதை என்றே வழங்கலாம். இப்படியே, 'காரணம்' என்பதைக் 'கரணியம்' என்று ஒரு புதிய வழக்குக் கொண்டுவரப்பட்டது. இரண்டுக்கும் வேறுபாடு அவ்வளவாக இல்லை. புதிய வழக்கு எதற்கு? 'காரணம்' என்னும் பழைய வழக்கே பொருந்தும். காரியம், காரணம் இரண்டும் தமிழ்ச் சொற்கள்.

இப்படியே சைவ சமயத்தை இந்து சமயம் என்றே சைவர் பலரும் சைவ ஆதீனத்தார் சிலரும் வழங்குகின்றனர். இதனுல் வரலாறே கெட்டுப் போகின்றது.

பழைய தமிழ் நாட்டில் தமிழ் வேதம் இருந்தது. திருக்குறள் இப்போது தமிழ்வேதம்; பின் வந்த சமற்கிருத வேதத்தை இந்த நாட்டு வேதம் என்று சொல்லிச் சொல்லிப் பழகி வந்தமையால், வரலாறே கெட்டு, சமற்கிருத வேதமே வேதம்

என்று வழக்கில் வந்தது. இப்போது அதை மாற்றுவது கடினமாயிருக்கிறது. அப்படியே பல புராணங்களும் வழக்காய் விளங்குகின்றன.

சில திருப்பதிகளின், இறைவன் பெயர் அம்மையின் பெயர்களைத் திருமுறைப் பதிப்புகளும் வேற்றுமொழிச் சொல்லில் பதிக்கின்றன. பதிப்பு வழக்கானபின், 'வழங்கி வருகிறதே' என்று சொல்வதில் பொருளிருக்கிறதா?

தமிழர்களும் சைவர்களுமே தமிழுக்கும் சைவத்துக்கும் மாருயிருக்கின்றனர். இது மாற்றப்படல் வேண்டும்.

'வடமொழி' என்னும் சொல்லும் 'ஆரியம்' என்னும் சொல்லும் தமிழ்ச் சொற்கள்; வடமொழி தவமொழி எனப்படும். 'வடக்கிருத்தல்' தவமிருத்தல் என்பதையும் உற்றுக்காண்க. வடக்குத் திசையே தவத் திசை என்று பொருள்படும். வடகம் என்பது உலர்ந்து போதலைக் குறிக்கும். ஆரியம் என்பது அருமையான மொழி என்று பொருளாகும்; குரு மொழியை, ஆசிரிய மொழியை, ஆரிய மொழி என்றனர் -தமிழர். ஆசிரியர்களாக உயர்ந்த நிலையில் தம்மை ஆக்கிக்கொண்டனர் சமற்கிருதத்தார். அதனுல் சமற்கிருதத்துக்கு 'ஆரியம்' என்பதும் ஒரு பெயர் என வழக்கத்தில் வந்தது.

இப்படித்தான் சமற்கிருத நிலைகளெல்லாம் வழக்கத்தில் வந்தவை என்று சொல்லப்படுகின்றன. வழக்கத்தில் வந்துவிடுமே என்று கருதாமல் தமிழ்மக்களும் ஒத்துழைத்தனர்! விழித்துக்கொள்வது நன்று!

சாதி மதப் பிரிவுகளும் அங்ஙனமே கால்கொண்டன. மக்களுக்குள் 'வருணுசிரம தர்மங்கள்' வழக்கில் வந்தன. தொழிலால் பிரிவு என்பது கொள்ளப்படும்.

சமயாசிரியர், 'அந்தணர்' என்பவரைக் குருக்கள் எனக் கொண்டனர். குருக்கள் தாம் என்றைக்கும் சிவபிரானை ஆராதிப்பவர். வேறு அந்தணர் என்போர் திருமுன்னிலை அறைக்குச் செல்லுதல் கூடாது; வேறு சிறு அறையிலேயே இருத்தல் வேண்டும். குருக்களுக்கு எடுபிடி ஆட்களாய் இருத்தல் வேண்டும். 'தீபாராதனை'யில் தட்டு எடுத்துக் கொடுத்தல் காண்க.

குருக்களுக்கு 'அவிசொரிந்து வேட்டல்' உண்டு. 'ஊன் பயிலும் வேள்வி' கிடையாது. 'பசு வேட்டு எரியோம்பி' என்னும் ஞானசம்பந்தர் வாக்கில், பசு என்பது பசுவின் இயல்பைக் குறிக்கும்.

ஞானசம்பந்தர் தம்மைத் 'தமிழ் ஞானசம்பந்தர்' என்று சொல்லிக் கொள்வார். இப்போதுள்ள 'சிவாச்சாரியர்' தமிழில் உள்ள திருமுறைகளைப் பாட நாணுகின்றனர். ஏனோ? சுந்தரர் என்னும் குருக்களும் திருமுறை ஓதினர்.

இங்ஙனமே வேதம் என்பதும் பழைய தமிழ் வேதத்தையே குறிக்கும். அறம் பொருள் இன்பம் வீடு வடிவாகிய அவை தாம் மக்களுக்கு உறுதி பயப்பன. சங்க இலக்கியங்களில் முன்பு இந்தத் தலைப்பு உண்டு.

மக்களுக்குள் சாதி என்பது, தந்தையின் தொழில் மகனுக்கு உரியதாதலால் பிறப்பை ஒட்டி வளர்ந்தது; தொழிலால் அமைந்த தென்றே கொள்ளவேண்டும்.

'சிறப்பொக்கும் செய்தொழில் வேற்றுமையால்' என்பது திருக்குறள்.

'சிறப்பு' என்றமையால், தொழிலில் சிறப்புத் தொழிலும் உண்டென்று தெரிகின்றது.

தொழில் எப்போதும் உள்ளது. ஆதலால் சாதிப்பிரிவும் நீக்குவது அருமை.

தக்கோர், சாதியைப் பாராட்டாமல் இருப்பர். பாராட்டாமல் இருப்பதே சாதியை நீக்கியதாகும். மதப் பிரிவும் அங்ஙனமே.

பிரிவுகள் இருந்தால்தான் தொழில்களும் பிறவும் நன்றாய் நடக்கும். மிகுதியான பயன்களைக் கொடுப்பதும் பிரிவுகளே. ஒரு மரத்தில் கிளைகளும் வளார்களுமே பழங்கள் மிகுதியாகப் பழுக்க உதவுகின்றன; பழங்களைப் பயக்கக் கிளைகள் வேண்டும். அடி மரம் அவற்றைத் தாங்கவே உதவுகின்றது. அடி மரத்தில் பழங்கள் பழுப்பது சிலவே; கிளைகளில் பழங்கள் பழுப்பதுதான் மிகுதி; கிளைகளும் வளார்களும் இல்லாவிட்டால் மிகுதியான பழங்களை எவ்வகையில் பெறுதல் கூடும்?

ஆகவே, மக்களுள்ளும் சாதி மதப் பிரிவுகள் தோன்றின. சில வகைகளில் இவற்றைப் பாராட்டாமல் இருக்கலாம். ஒரு மாநாடு என்றால், திருக்குறள் பேரவை என்றால், அங்கே சாதி அடிப்படையில் பிரித்தல் இயலாது. அப்படிப் பாராட்டாமல் இருப்பதொன்றே தக்கது. மதப் பிரிவுகளையும், பிரிவுகளை நீக்குவதைவிடப், பாராட்டாமல் இருப்பதே மேம்பாடாகும்.

———

# தமிழை வழுத்துவம்!

[புலவர் ப. எழில்வாணன், பள்ளபட்டி.]

என்று தோன்றிய தென்பதை எவரும்
அன்றும் அறியார்; இன்றும் உலகில்
அரியது செய்யும் அறிஞரும் அறியார்!
அறியா ஆய்வினில் இதுவும் ஒன்றும்!
முனைந்தவர் எல்லாம் முடித்தனர் வாழ்வையே!
அணைந்தவர் எத்தனை ஆயிரங் கோடியோ?
அத்துணைத் தொன்மை; அழியா வலிமை;
பித்தனைக் கூட, பிணிக்கும் இனிமை;
அளவிடற் கரிய அருஞ்சொற் பொருளும்
எளிதிற் புரியும் இன்சொல் வளமும்
பிறமொழி கொள்ளா இலக்கண முறையும்
தனியே எழுத்து, சொல், பொருள் மூன்றிலும்
அணியொடு அன்றே அமைந்த தியற்கை!
அயல்மொழி அனைத்தும் உலகில் உயிர்க்க
முதன்மொழி யென்றும் தாய்மொழி யென்றும்
அன்றே இருந்த தருந்தமிழ் மொழியே!
என்றும் அழியா அவ்விளந் தமிழை
வென்றிடும் மொழியும் வையத்தில் இல்லை!
அலைகடல் அடுத்து வாழ்வோர் பலரையும்
அன்புடன் ஈர்த்துப் பயிலச் செய்யும்
அவ்வருந் தன்மையும் இயல்பா யமைந்த,
பல்கலை உலகெலாம் பரவச் செய்த
நுண்புலம் பழமை நூல்வள முடைய
இன்புது நூல்தரு தமிழை
மன்பதை உய்ய வழுத்துவம் இனிதே!

———

# 'பதிப்புக் கலைப் பார்வை'-1.

[கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

பதிப்புக்கலை ஓர் அருமையான கலை; அறிவியல் சிறப்பால் அரும்பி மலர்ந்து மணம் பரப்பும் கலை; அக் கலை, நில்லாத வாழ்வை நிலைபெறப் பதியச் செய்து, நிலைக்க வைக்கும் கலை; வழி வழி வருவார்க்கு வளமார்ந்த வைப்பாகி வளர்க்கும், வனப்புக் கலை; தன் பதிப்புப் பொருள் போலவே பதிப்பாளியையும், அழியா அமரநிலைக்கு ஆக்கி வைக்கும் கலை!

பதிப்புக் கலையின் ஒரு சிறந்த பகுதி 'பழஞ்சுவடி'களைத் தேடித் தொகுத்தும், பாதுகாத்தும், ஒப்பிட்டு, ஆய்ந்தும், உண்மைப் பாடமும் பொருளும் கண்டு தெளிந்தும் 'கவின் பதிப்பென்னும் காட்சிப் பொருளாக்கி' வைப்பதாகும். புதுநூல் படைத்துப் பதிப்பிப்பதினும், சிதைந்தும் செல்லரித்தும் விடுபட்டும் விளங்காதும் உயிர்தாங்கிக்கொண்டிருக்கும் பழஞ் சுவடியைப் பதிப்பிப்பதன் அருமை, அதன் வயப்பட்டார்க்கே அறியக் கூடுவதாம்.

"ஏடு எடுக்கும்போது ஓரஞ் சொரிகிறது; கட்டு அவிழ்க்கும் போது இதழ் முரிகிறது; ஒற்றை புரட்டும்போது துண்டு துண்டாய்ப் பறக்கிறது; இனி எழுத்துகளோ வென்றால், வாலும் தலையும் இன்றி நாலுபுறமும் பாணக் கலப்பை மறுத்து மறுத்து உழுது கிடக்கிறது"—ஏட்டுச்சுவடி இயல்பைக் காட்ட இது போதுமே! கலித்தொகைப் பதிப்பில் திரு. சி. வை. தாமோதரம் பிள்ளை எழுதியுள்ள முன்னுரைப் பகுதியில் உள்ள வரிகள் இவை!

பழஞ்சுவடியை ஆய்ந்து பதிப்பிக்கும் பணி, ஒரே முறையில் ஒருவரால் செப்பமாக அமைந்து, முற்ற முடியும் தன்மையது அன்று. "அறிதோறும் அறியாமை கண்டற்று" என்பதுபோல் பிழை கண்டு கண்டு வழிவழியே திருத்தம் பெறவேண்டிய இயல்பினது; ஆகலின், அறிஞர் பெருமக்களின் உன்னிப்பான பார்வையில் பழஞ்சுவடிகளின் புதுப்பதிப்புகள் தடங்கலின்றி நடந்துகொண்டே இருந்தால் அன்றி, அச் சுவடியின் முழுப்பயனும் உலகம் கொள்ளுதற்கு இயலாதாம்!

'அச்சுப்பணியோ நச்சுப்பணியோ' என்பது பட்டறிந் துரைத்த பழமொழி. அச்சுத்தாள் மெய்ப்புப் பார்த்துத் திருத்துதல், ஆட்ட ஒட்டப் பரபரப்புப் பணி அன்று; ஆர அமர்ந்து, ஊன்றி உணர்ந்து, கூர்ந்து குறிக்கொண்டு நோக்கிச் செய்யத் தக்க அரும்பணியாகும். இப்படி மெய்ப்புப் பார்க்க வல்லாரிடமும் ஒளிந்து விளையாடி மறைந்துகொள்ள வல்லது பிழை; அது, வேலையெல்லாம் முடிந்து நூலாகிவிட்டது என்று பதிப்பாளி மகிழும் போதிலே, தன் பிழைமுகம் காட்டித் தப்பி விட்டேன் பார்த்தீரா!' என்று பழித்துக் காட்டி வினு எழுப்பும்! படிப்பவர்க்குப் பளிச்சிட்டுத் தோன்றிப் பதிப்பாளிக்குக் 'குற்றப் பட்டயம்' தீட்டித் தந்து குளிரும்! இத்தகைய சிக்கல் மிக்க பணியைச் செப்பமாகச் செய்பவர், "செயற்கரிய செய்யும் செம்மல்" என்று பாராட்டுதற்குத் தக்கோர் ஆவர்.

பழம்பதிப்பு நூல்களை ஆராய்தலாலும், பழம் பதிப்பாளர் குறிப்புகளை நோக்குதலாலும் அறியப்பெறும் சில அரிய கருத்து களைத் தக்க வகையில் சுட்டிச் செல்லுதல் இக் 'கட்டுரைத் தொடரின்' நோக்கமாகும்.

## க. "ஆரிக்கும்—ஆரிரக்கும்."

ஆர்த்தல் என்பதற்குரிய பலபொருள்களுள் 'ஒலித்தல்' என்பது ஒரு பொருள். ஆனல், 'ஆரிக்கும்' என்ருெரு சொல்லே வழக்கில் இல்லை. இருந்தும் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் இயற்ருமலே ஏடுபெயர்த்து எழுதியோர் பிழையால் நேர்ந்து, பதிப்பாசிரியர் பிழையாகவும் பதிந்து உரைகாரர் பிழையாகவும் உருக்கொண்டு, இன்றுவரை அப்படியே நிலைத்துவிட்டது. களையைக் களைவது போல் பிழையையும் பிழைக்க விடாமல் செய்வதே 'பதிப்புச் செப்பம்' ஆகும்.

"திங்கரும்பு நல்லுலக்கை யாகச் செழுமுத்தம்
பூங்காஞ்சி நீழல் அவைப்பார் புகார் மகளிர்
ஆழிக் கொடித்திண்டேர்ச் செம்பியன் வம்பலர்தார்ப்
பாழித் தடவரைத்தோள் பாடலே பாடல்
பாவைமார் ஆரிக்கும் பாடலே பாடல்"

என்பது 'வாழ்த்துக் காதை'யில் வரும் 'வள்ளைப் பாட்டு'. 'ஆரிக்கும்' என்பதற்கு 'ஆர்க்கும்' என்னும் பாடவேறுபாடும் சிலப்பதிகாரப் பதிப்பில் காட்டப்பெற்றுள்ளது. ஆனல், 'ஆர்க்கும்' என்பது இவ்வரிப் பாடலில் அமைந்துள்ள வெண்டளை இலக்கணத்தொடு பொருந்தாதது ஆகலின், அப்பாடம் ஏற்கத் தக்கது அன்ரும்.

'ஆரிக்கும்' என்றொரு சொல்லே இல்லையாக, பொருளமைதியும் பொருந்திய தன்றாக, அதனை இளங்கோவடிகள் இயம்பினார் என்பதும் கொள்ளத் தக்கது அன்றாம்.

சிலப்பதிகாரப் பதிப்பினைத் தம்மிடம் இருந்த சுவடியுடன் ஒப்பிட்டு நுனித்து ஆராய்ந்த அறிஞர் வையாபுரிப்பிள்ளை 'ஆரிரக்கும்' எனப் பாட முண்மையைக் கண்டார். அதனை 'அகராதி நினைவுகள்' என்னும் தம் நூலில் குறிப்பிட்டார். அவர் குறிப்பிட்டவாறு 'ஆரிரக்கும்' என்று பாடம் இருப்பதே இலக்கணத்திற்குப் பொருந்தியதுடன், பொருளமைதியும் பொருந்தியதாகும்.

'தீங்கரும்பு' என்னும் இப்பாடலை அடுத்து நிற்கும் தாழிசைகள் இரண்டன் இறுதியும் முறையே, "வேப்பந்தார் நெஞ்சுணக்கும் பாடலே பாடல்" என்றும், "பனந்தோ டுளங்கவரும் பாடலே பாடல்" என்றும் பாண்டியனுக்குரிய வேப்ப மாலையையும், சேரனுக்குரிய பனந்தோட்டு மாலையையும் குறித்தன. 'ஒரு பொருள்மேல் மூன்றடுக்கல்' என்னும் தாழிசை இலக்கணத்தின்படி முதற்பாடல் சோழன் அணியும் ஆத்திமாலையைக் குறித்திருத்தல் வேண்டும். ஏனெனின், போந்தை (பனை) வேம்பே ஆர் (ஆத்தி) என வரூஉம் மாபெரும் தானையர் மூவேந்தர் ஆகலின். இங்கே சோழனது ஆத்திமாலை மட்டும் இல்லாமை அறியத்தக்கது. அறியவே, 'ஆரிக்கும்' என்பது பிழையானது என்றும், 'ஆர் (ஆத்தி) இரக்கும் என்பதே பொருந்தியது என்றும் கொள்ள வேண்டும். 'ஆர் இரக்கும்' என்பதற்கு 'ஆத்தி மாலையை வேண்டும்' என்பது பொருள்.

டாக்டர் உ. வே. சாமிநாதையரின் பதிப்பொடும், ஏட்டுச் சுவடியை ஒப்பிட்டுப் பார்த்தே 'ஆரிரக்கும்' 'என்னும் பாட முண்மையைக் கண்டு தெளிகிறார் வையாபுரிப்பிள்ளை. அக் கருத்தையும் வெளிப் படுத்தி யுரைத்தார்; கட்டுரைகளிலும் எழுதினார். ஆனால் 'ஆரிக்கும்' என்னும் அப் பிழைச் சொல் ஐயரவர்களின் பின் வந்த பதிப்புகளிலும் மாறாமல் அப்படியே உள்ளது. அப் பதிப்பினை மூலமாகக் கொண்டு புத்துரை கண்ட நாவலர் நாட்டாரவர்கள் உரையிலும் இத் திருந்திய பாடம் ஏறவும் இல்லை; உரைத் திருத்தம் பெறவும் இல்லை; அதன் மறுபதிப்புகளின் நிலைமையும் அப்படியேதான். "பாவைமார் ஆரிக்கும் பாடலே பாடல்—அம் மகளிர் ஆர்த்தலைச் செய்யும் பாடலே சிறந்த பாடலாகும்" என்று உரையும்; "ஆரிக்கும் ஆதரிக்கும் என்றுமாம்" என்று குறிப்பும் நாவலர் வரைந்துள்ளமையால் இச் சொல்லும் இப் பொருளும் சான்றொடும் அகரமுதலிகளில் சுட்டிக்காட்ட நேர்ந்துவிடல் உண்மை; இத் தவறுடைய

பாடத்தைக் கருத்தில் கொண்டே, பல்கலைக் கழக அகரமுதலியில் இச்சொல் ஏறியதையும், அதனைக் களைய வேண்டியதையும் திரு. வையாபுரிப்பிள்ளை குறிப்பிட்டார். ஆயினும் என்ன ? இந் நாள்வரை திருத்தம் பெறவில்லை; இனிவரும் பதிப்புகளிலேனும் இப் பொருள் பொதிந்த பாடம் போற்றிக்கொள்ளப் பெறுதல் வேண்டும். இவ்வாறு ஆராய்ந்து கொள்ளத் தக்க பாடங்கள் பழைய இலக்கண இலக்கியங்களில் பலவாக உள. கிடைக்கும் ஏட்டுச் சுவடிகள் அளவிலேனும் பதிப்பு நூல்களுடன் ஒப்பிட்டு நோக்கி ஆராயும் ஒருநிலை அறிஞர்களிடத்தோ, ஆராய்ச்சி அமைப்புகளிடத்தோ உண்டாகுமானல் இப்பொழுதும் கூட சில நல்ல பாடங்கள் கிடைத்தல் உறுதியாகும்.

(தொடரும்)



## *கழகம் என்றால்

## சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமே !

‘கழகம் தமிழுக்கும், சைவத்திற்கும் செய்த தொண்டை யாவரும் போற்றுகின்றனர். என்னுடைய நூல்கள் கழகத்தின் வழி வந்ததால்தான் புலவர்கள் மதிப்புத் தருகின்றனர். அந்த வகையில் கழக முத்திரை இருந்தால் தமிழ் நூல்களுக்குப் பெருமை வருகின்றது. தமிழ் இலக்கிய உலகில் ‘கழகம்’ என்றால் ‘சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்’ என்ற பெருமை இன்றும் நிலவுகின்றது. 9—12—1980

---

* ஆட்சித்துறையில் உயர் அலுவலிலிருக்கும் கழக நூலாசிரியர் களில் ஒருவர் கழகப் பதிப்புப் பணியைப் பாராட்டி எழுதியுள்ள கருத்து.

# "நேர், நிரை, நேர்பு, நிரைபு, ஆகிய அசைகளின் அலகுகள்"

[சுந்தரசண்முகனர், புதுச்சேரி]

தொல்காப்பியம்—பொருளதிகாரம்—செய்யுளியலில் உள்ள "இருவகை உகரமோடு" என்று தொடங்கும் நூற்பா உரையின் இறுதியில், உரையாசிரியராகிய இளம்பூரணர்,

> "அலகிடுங்கால் நேரசை ஓர் அலகு, நிரையசை இரண்டு அலகு, நேர்பு அசை மூன்று அலகு, நிரைபு அசை நான்கு அலகு பெறும்."

என்று எழுதியுள்ளார். தொல்காப்பியர் நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நான்கு அசைகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளாரே தவிர, அவை பெறும் அலகுகள் எத்தனை என்று எண்ணிக்கை விதந்து கூறினர் இலர். எனவே, இளம்பூரணர் இந்த அலகு எண்ணிக்கையை எங்கிருந்து பெற்றிருக்கலாம்?

"நேரசை என்று நிரையசை என்று
ஆயிரண் டாகி அடங்குமன் அசையே."

என்னும் யாப்பருங்கல நூலின் (5-ஆம்) நூற்பா உரையில்,

"நேரே நிரையே நேர்பே நிரைபென
ஈரிரண் டென்ப அசையின் பெயரே."

"நேரசை ஒன்றே நிரையசை இரண்டலகு
ஆகும் என்ப அறிந்திசி னோரே."

"நேர்ஓர் அலகு,நிரை இரண்டு அலகு,
நேர்பு மூன்று அலகு,நிரைபு நான்கு அலகு என்று
ஓதினர் புலவர் உணரு மாறே."

என்னும் மூன்று மேற்கோள் நூற்பாக்கள் தரப்பட்டுள்ளன. இவற்றுள் முதல் இரண்டும் பெயர் தெரியாத நூலின் பாக்கள்; மூன்ருவது அவிநயம் என்னும் நூலின் பா. அவிநயம் நூலில், "ஓதினர் புலவர் உணரு மாறே" என்று ஆசிரியர் அவிநயனர் கூறியிருப்பதிலிருந்து, அவருக்கு முன்பே, புலவர் பலர்

இவ்வாறு கூறியிருந்தமை பெறப்படும். அவிநயம் போன்ற நூல்களை அடிப்படையாகக் கொண்டே, தொல்காப்பிய உரையாசிரியராகிய இளம்பூரணர், நான்கு அசைகளுக்கும் அலகு எண்ணிக்கை கூறியிருக்க வேண்டும்.

ஓர் அலகு பெறுதல் என்ருல் என்ன?—ஈரலகு பெறுதல் என்ருல் என்ன?—மூன்றலகு பெறுதல் என்ருல் என்ன? —நான்கு அலகு பெறுதல் என்ருல் என்ன?—என்னும் செய்தி புரியாத புதிர்போல் தோன்றுகிறது.

க, கா, என நேரசை ஓர் எழுத்தாய் இருப்பதே, நேரசை ஓரலகு பெறும் என்பதன் பொருள். கல், கால் என நேரசை இரண்டு எழுத்துக்கள் பெற்றுள்ளனவே எனில், ஒற்றெழுத்துக்குத் தனி மதிப்பில்லை. அடுத்து, அணி, இரு, என நிரையசை இரண்டு எழுத்துக்கள் பெற்றிருப்பதே நிரையசை, (அ - ணி, இ - ரு, என) இரண்டு அலகுகள் பெறும் என்பதன் பொருளாகும்—என்பதாகச் சிலர் விளக்கம் தரலாம். இந்தக் கருத்துச் சரியென்ருல், இதை அடிப்படையாகக் கொண்டு நோக்குங்கால், சால்பு (சால்-பு) என நேர்பு அசை இரண்டு அலகுகள் பெறுவதாகவும், உருபு (உ-ரு-பு) என நிரைபு அசை மூன்று அலகுகள் பெறுவதாகவுமே கொள்ள முடியும். எனவே, நேர்பு மூன்றலகும், நிரைபு நான்கலகும் பெறும் என்னும் கருத்து தவருகி விடும். இவ்வாறு இவற்றைத் தவறு உடையனவாகக் கூறுவது, புறமுதுகிட்டு ஓடுதல் போன்றதாகும்.

நேரசையும் நிரையசையும் ஒருசார் தனி அமைப்புடையன; நேர்பு அசையும் நிரைபு அசையும் மற்ருெரு சார் தனி அமைப்பு உடையன. தண்ணீரை நோக்கித் தாவும் தவளையையும் தரையை நோக்கித் தாவும் எலியையும் முடிச்சுப் போட்டுக் கட்டினுற்போல, இந்த இருவேறு அமைப்புகளையும் ஒன்றுபடுத்த முயல்வது தவறு—என்பதாகச் சிலர் கூறலாம். இவர்கள், நேரசை ஓரலகும் நிரையசை ஈரலகும் பெறும் என்பதற்கு மேற்கூறிய விளக்கத்தையே கூறி, நேர்பு அசை மூன்றலகும் நிரைபு அசை நான்கலகும் பெறும் என்பதற்கு வேறு வகையான விளக்கம் கூறலாம். வேறு வகையான விளக்கமும் உண்டு.

மேலே தரப்பட்டுள்ள இருசாராரின் கருத்துக்களுள் நாம் எதைச் சார்ந்து நிற்பது? மூன்ருவது கருத்து விளக்கம் ஒன்று உண்டு; நாம் அதைச் சார்ந்து நிற்கலாம். இந்தக் கருத்து, நான்கு அசைகளையும் ஒரே வகையில் தொடர்புறுத்துவதாகும். இந்தக் கருத்து விளக்கத்தைப் பெறுவதற்கு, நாம், முதலில்,

நேர்பு அசை மூன்றலகும் நிரைபு அசை நான்கலகும் பெறும் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். இது புரிந்தால், இதன் அடிப்படையில், நிரையசை ஈரலகும் நேரசை ஓரலகும் பெறும் என்பதையும் புரிந்துகொள்ள வழியுண்டாகும். இனி, இம் முயற்சியில் ஈடுபடலாம்:-

நேர்பு அசை மூன்று அலகும் நிரைபு அசை நான்கு அலகும் பெறுவது எப்படி என்பதைக் கண்டுபிடிப்பதற்கு வேண்டிய வழிவகையினை, ஆசிரியர் தொல்காப்பியனாரும், உரையாசிரியர்களாகிய பேராசிரியரும் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் தத்தம் எழுத்துப் படைப்புக்களில் தெளிவாகத் தெரிவித்துள்ளனர். அந்த வழியினைப் பின்பற்றிப் பிடித்துக்கொண்டு மேலும் முன்னேறிப் பயணம் செய்வோமாயின், குறிப்பிட்ட இலக்கை அடையலாம். அந்த வழிவகை வருமாறு :

“குறிலே, நெடிலே, குறில்இணை, குறில்நெடில்,
ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையும் என்றிசிற் பெயரே.”

“இருவகை உகரமோடு இயைந்துஅவை வரினே
நேர்பும் நிரைபும் ஆகும் என்ப
குறிலிணை உகரம் அல்வழி யான.”

என்பன, தொல்காப்பியம்—பொருளதிகாரம்—செய்யுளியலின் மூன்றாவதும் நான்காவதுமான நூற்பாக்கள் ஆகும்,

இவற்றின் பொருளாவது :

‘க’ என்பது போன்ற தனிக் குற்றெழுத்துக்களும், ‘கல்’ என்பது போலத் தனிக் குற்றெழுத்தோடு ஒற்று சேர்ந்தனவும், ‘கா’ என்பது போன்ற தனி நெட்டெழுத்துக்களும், ‘கால்’ என்பது போலத் தனி நெட்டெழுத்தோடு ஒற்று சேர்ந்தனவும் ஆகிய நான்கு வகை அமைப்புக்களும் நேர் அசைகளாம். அஃதாவது, க, கல், கா, கால்—என்பன நேர் அசைகளாம்.

‘கட’ என்பதுபோல இரு குற்றெழுத்து இணைந்தனவும், ‘கடல்’ என்பதுபோல இரு குற்றெழுத்தோடு ஒற்று சேர்ந்தனவும், ‘கடா’ என்பது போல ஒரு குற்றெழுத்தும் ஒரு நெட்டெழுத்தும் இணைந்தனவும் ‘கடாம்’ என்பது போலக் குறில் நெடிலோடு ஒற்று சேர்ந்தனவும் ஆகிய நான்கு வகை அமைப்புக்

களும் நிரை அசைகளாம். அஃதாவது, கட, கடல், கடா, கடாம் என்பன நிரையசைகளாம்.

கு, சு, டு, து, பு, று, என்னும் குற்றியலுகர எழுத்துக்களுள் ஒன்றோ அல்லது நு, ஞு, ணு, நு, மு, னு, யு, ரு, லு, வு, ழு, ளு என்னும் முற்றியலுகர எழுத்துக்களுள் ஒன்றோ நேரசைக்குப் பின் இணைந்துவரின், அந்த அமைப்புக்கு 'நேர்பு அசை' என்று பெயராம். நேரசை நான்கு வகை என்றோம். அவற்றுள், 'க' என்பது போன்ற தனிக்குறிலும் ஒன்றாகும். தனிக் குறிலுக்குப் பின் குற்றுகர எழுத்தோ முற்றுகர எழுத்தோ வரின், அந்த அமைப்பு மட்டும் நேர்பு அசை ஆகாது; அது, இருகுறில் இணைந்த நிரையசை எனப்படும். அஃதாவது :—'க' என்னும் நேரசையோடு 'டு' என்னும் குற்றுகர எழுத்து சேர்ந்து 'கடு' எனவும், அக் குறிலோடு 'ரு' என்னும் முற்றுகர எழுத்து சேர்ந்து 'கரு' எனவும் வரின், இந்த 'கடு', 'கரு' என்பன நேர்பு அசை யாகக் கருதப்படாமல், நிரையசையாகவே கருதப்படும். எனவே, நேரசை நான்கனுள், தனிக் குறிலான நேரசை தவிர, மற்ற மூன்றுவகை நேரசைகளுக்கும் பின்னே குற்றுகரமோ முற்றுகரமோ வரின், அந்த மூவகை அமைப்புக்கள் 'நேர்பு அசை' எனப்படும். எடுத்துக்காட்டுக்களாவன :—

(1) கட்டு—தனிக்குறில் ஒற்றின்பின் குற்றுகரம் வந்த நேர்பு அசை.

(2) காடு—தனி நெடிலின் பின் குற்றுகரம் வந்த நேர்பு அசை.

(3) காட்டு—தனி நெடில் ஒற்றின்பின் குற்றுகரம் வந்த நேர்பு அசை.

இந்த எடுத்துக்காட்டுக்களால், நேர்பு அசை, மூவகைப் படும் என்பது பெறப்படும். இந்த மூவகையையே, [நேர்பு அசை மூன்று அலகு பெறும்—என்பதாக முன்னோர் சிலர் கூறிவிட்டனர். இந்தக் கூற்றில் ஒரு சிறு திருத்தம் செய்து கொள்ளின் சரியாய்ப் போகும். அஃதாவது :—அலகு என்பதற்கு முன் 'வகை' என்னும் சொல்லைச் சேர்த்து, நேர்பு அசை மூன்று வகை அலகு பெறும் எனக் கூறவேண்டும். அடுத்து, நிரைபு அசையை நோக்கிப் பயணத்தைத் தொடரலாம்:

குற்றுகர எழுத்தோ அல்லது முற்றுகர எழுத்தோ நிரை யசைக்குப் பின் இணைந்துவரின், அந்த அமைப்புக்கு 'நிரைபு

அசை' என்று பெயராம். நிரையசை நான்கு வகை என்றோம். அந்த நால்வகைக்குப் பின்னே குற்றுகரமோ முற்றுகரமோ வரின், நிரைபு அசையும் நால்வகையாகும். எடுத்துக்காட்டுகளாவன :

(1) திருடு—குறிலிணைக்குப் பின் குற்றுகரம் வந்த நிரைபு அசை.

(2) திருட்டு—குறிலிணை ஒற்றுக்குப்பின் குற்றுகரம் வந்த நிரைபு அசை.

(3) மலாடு—குறில் நெடிலுக்குப் பின் குற்றுகரம் வந்த நிரைபு அசை.

(4) பணட்டு—குறில் நெடில் ஒற்றுக்குப் பின் குற்றுகரம் வந்த நிரைபு அசை.

இந்த எடுத்துக்காட்டுக்களால், நிரைபு அசை நால்வகைப் படும் என்பது பெறப்படும். இந்த நான்கு வகையையே, நிரைபு அசை நான்கு அலகு பெறும்—என்பதாக முன்னோர் சிலர் மொழிந்துவிட்டனர். இங்கும், 'வகை' என்பதைச் சேர்த்து, நிரைபு அசை நான்கு வகை அலகு பெறும் எனக் கூறவேண்டும்.

எனவே, நேர்பு அசை மூன்று அலகும் நிரைபு அசை நான்கு அலகும் பெறும்—என்னும் செய்தி இப்போது விளங்க லாம். இச் செய்தியைத் தெரிவித்ததில், ஓர் எழுத்துக்கூட எனது சொந்த எழுத்து அன்று; இச் செய்தி முழுவதும், மேற்காட்டியுள்ள தொல்காப்பிய நூற்பாக்கள் இரண்டிலும் பொதிந்து கிடக்கிறது. அந்த நூற்பாக்களைக் கூர்ந்து நோக்கவும் வேண்டியதில்லை—மேலோடு நோக்கினும் இது விளங்கும்.

உரையாசிரியர்களாகிய பேராசிரியரும் இளம்பூரணரும் நச்சி னார்க்கினியரும் தத்தம் உரைகளில் தந்துள்ள எடுத்துக்காட்டுக் களின் வாயிலாக, இந்தச் செய்தியைப் புரிந்துகொள்ள வழிகாட்டி யுள்ளனர். முதலில் பேராசிரியரின் எடுத்துக்காட்டுகள் வருமாறு :

"நேர்புஅசை மூன்றும் நிரைபுஅசை நான்கு மாயின.

(உ-ம்) வண்டு, நாகு, காம்பு எனவும்,
வரகு, குரங்கு, மலாடு, பணட்டு எனவும்,
நேர்பும் நிரைபும் வந்தவாறு."

என்பது உரைப் பகுதி. இந்த எடுத்துக்காட்டுக்களின் வாயிலாக, நேர்பு அசை மூவகைப்படும் எனவும், நிரைபு அசை நால்வகைப் படும் எனவும், பேராசிரியர் தெளிவாகத் தெரிவித்துள்ளமை

காணலாம். அடுத்து, இளம்பூரணரின் எடுத்துக்காட்டுகள் வருமாறு :

"காது, காற்று, கன்று; காவு, சார்வு, கல்வு—என்பன நேர்பு அசை.

வரகு, அரக்கு, மலாடு, பனாட்டு; கதவு, புணர்வு, உருமு, வினவு—என்பன நிரைபு அசை."

இவை உரையில் உள்ள எடுத்துக்காட்டுக்கள் ஆகும். இளம்பூரணர், குற்றுகரம் வந்த மூவகை நேர்பு அசைகளுக்கும், முற்றுகரம் வந்த மூவகை நேர்பு அசைகளுக்கும் முதலில் எடுத்துக்காட்டுக்கள் தந்துள்ளார். பின்னர், குற்றுகரம் வந்த நால்வகை நிரைபு அசைகளுக்கும் முற்றுகரம் வந்த நிரைபு அசைகளுக்கும் எடுத்துக் காட்டுக்கள் தந்துள்ளார். இந்த எடுத்துக் காட்டுக்களின் வாயிலாக, நேர்பு அசை மூவகைப்படும் எனவும், நிரைபு அசை நால்வகைப்படும் எனவும், இளம்பூரணரும் தெளிவாகத் தெரிவித்துள்ளமை காணலாம்.

(தொடரும்)

———

## தை மாதம் எப்படி வந்தது?

'தை' வடசொல். 'திஷ்ய' ஒரு விண்மீன். திங்கள் அம்மீனொடு கலக்கும் மாதம் (திசம்பர்-சனுவரி) 'தைஷ்ய' – 'தைஷ்' 'தைஷ'. நம் முன்னோர் அதைத் தைஇ என்று குறித்தனர். இன்று தை என்று வழங்குகின்றது. தை மாதத்தின் தமிழ்ப் பெயர் "சுறவம்".

'சுறவம்' என்பது மகரம் என்னும் அவ் விண்மீனின் தமிழ்ப் பெயர். மகர (ப் பகு)வாய் என்னும் தலைக்கோலம் சுறவுவாய் எனப்படும். "சுறவுவாயமைத்த" (பெரும்பாண். 385) சுறவுக்குழை மகரமீன் வடிவாகச் செய்த காதணி (இலக். அக.).

மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள்

சொல்லாக்கம் கேட்டவர்: பி. வி. கிரி.

# சக்தி வழிபாடு

[தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி. காம்., விசாரத்

*இணைப்பதிவாளர், தனி அதிகாரி, திருநெல்வேலி மத்திய கூட்டுறவு வங்கி (வரையறை) திருநெல்வேலி ]*

சக்தியின் பெருமை :

உலகில் எதுவும் இயங்க அல்லது எதையும் இயக்க சக்தி இன்றியமையாதது. தள்ளாத வயோதிகனுக்கு நடக்க சக்தி இல்லை. குருடனுக்குப் பார்க்க சக்தி இல்லை. செவிடனுக்குக் கேட்க சக்தி இல்லை. ஊமைக்குப் பேச சக்தி இல்லை. மின் சக்தி இல்லையெனில் இரவில் நாடு, நகர், பட்டிதொட்டி எல்லாம் இருள் மயமாகக் காட்சி அளிக்கிறது. பணவீக்க காலத்தில் பணத்தின் வாங்கும் சக்தி குன்றிவிடுகிறது. அணுசக்தியைக் கொண்டு ஆக்கவும் செய்யலாம், அழிக்கவும் செய்யலாம். ஆண்டவனை அடைய ஆன்மீகசக்தி தேவைப்படுகிறது. இதைத்தான் கவியரசர் பாரதியார்,

"வாழ்வு பெருக்கும் மதியே சக்தி
மாநிலங் காக்கும் மதியே சக்தி
தாழ்வு தடுக்குஞ் சதிரே சக்தி
சஞ்சலம் நீக்குந் தவமே சக்தி
வீழ்வு தடுக்கும் விறலே சக்தி
விண்ணை யளிக்கும் விரிவே சக்தி
ஊழ்வினை நீக்கும் உயர்வே சக்தி
உள்ளத் தொளிரும் விளக்கே சக்தி"

என்றெல்லாம் குறிப்பிடுகிறார்.

இந்து மதத்தில் அறுவகைச் சமயங்கள் பேசப்படுகின்றன. "அறுவகைச் சமயம் வைத்தாய்" என்பது அப்பர் திருவாக்கு. "அறுசமயநீதி யொன்றும் அறியாமல்" என்று அருணகிரிநாதர் அருளிச் செய்துள்ளார். அறுசமயங்களில் சக்தியை முழு முதற் கடவுளாகவும், சக்தியினின்றே எல்லாம் தோன்றியனவாகவும் கொள்வது சாக்தம் எனப்படும். எல்லாம் வல்ல திருமகளின் சத்துவ, இராசத, தாமத குணங்களினின்றும் முறையே கலைமகள், திருமகள் மற்றும் மாகாளி தோன்றியதாக மார்க்கண்டேய புராணத்தில் தேவி மகாத்மியத்தில் கூறப்பட்டுள்ளதாகத் திரு. கோபிநாதராவ் தமது "இந்து சமயக் கடவுள் வடிவங்களின்

அடிப்படைகள்'' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். சாக்தர்கள் மட்டுமின்றிச் சைவர்களும், வைணவர்களும் இறைவியை மலைமக ளாகவும், அலைமகளாகவும் வணங்குகின்றனர். ஆனால் சைவத் திலும் வைணவத்திலும் சிவனே அல்லது திருமாலோதான் முழு முதற் பொருளாகக் கொள்ளப்படுகிறார்கள்.

தமிழகத்தில் சக்தி வழிபாடு :

தமிழகத்தில் நிலம் மருதம், முல்லை, நெய்தல், குறிஞ்சி என நால்வகையாக வகுக்கப்பட்டது. இவை தம் நிலையில் திரிந்தால், பாலை எனப்படும். பாலை நிலத்திற்குக் கடவுள் கொற்றவை யாம். சங்க இலக்கியமான திருமுருகாற்றுப்படையில் "வெற்றி வெல் போர்க் கொற்றவை'' என்றும், "இழையணி சிறப்பிற் பழை யோள்'' என்றும் பேசப்படுகிறாள். மேலும் கோவலனும் கண்ணகியும் மதுரை செல்லும் பெருவழியில் ஐயையின் கோட் டத்தை அடைந்ததாகச் சிலப்பதிகாரத்தில் உள்ளது. கொற்ற வையின் கோயிலில் அவர்கள் தங்கி இருந்தபோது, வேட்டுவர்கள் கொற்றவைக்கு வழிபாடு நடத்தினர்.

> "இரண்டு வேறுருவில் திரண்டதோள் அவுணன்
> தலைமிசை நின்ற தையல் பலர் தொழும்
> அமரி குமரி கவுரி சமரி
> சூலி நீலி மாலவற் கிளங்கிளை
> ஐயை செய்யவள் வெய்யவாள் தடக்கைப்
> பாய்கலைப் பாவை பைந்தொடிப் பாவை
> ஆய்கலைப் பாவை அருங்கலப் பாவை'' (சிலப்-12 சுஙு-எ௩)

என்றெல்லாம் போற்றப்படுகிறாள். மேலும் வீரத்தின் உருவாம் கொற்றவைக்குப் பலி கொடுக்கும் பழக்கம் இருந்தமைக்கு இலக்கியச் சான்றுகளும், பிறவும் உள்ளன. இவற்றினின்றும் தமிழகத்தின் சக்தி வழிபாடு தொன்றுதொட்டு இருந்தமை தெரிகிறது.

சக்தி வடிவம் - கோயில் :

பொதுவாக நான்கு கைகளுடனும் மூன்று கண்களுடனும் சாந்தம் தவழும் முகத்துடனும் இறைவியை வடிக்கவேண்டுமாம். தலையில் கரந்த மகுடமும், ஏனைய அணிகலன்களும் அணிந்து, பட்டாடை உடுத்தியிருக்க வேண்டும். பின் இரு கைகளில் பாசமும் அங்குசமும் இருக்க, முன் இரு கைகள் வரதம் மற்றும் அபய முத்திரையில் இருக்கவேண்டும். தன் நாயகனுக்கு அருகில் இறைவியை அமைப்பதாயின், இரு கைகளும், இரு

கண்களும்தாம் இருக்கவேண்டும். ஒரு கை கடகமுத்திரையில் (பூ ஏந்த நண்டு வடிவில் இருப்பது) மற்ருெரு கை (கத்யவலம்பித அஸ்தத்தில்) தொங்கிய நிலையில் இருக்கும். இவ்வாறு இறைவியை சிலைவடிவத்தில் வடிக்கவேண்டும் எனச் சிற்ப நூல்கள் கூறு கின்றன.

இறைவியை வணங்க ஏற்படுத்தப்பட்ட கோயில்களில் காஞ்சிபுரம் காமாட்சியம்மன் கோயில், மதுரை மீனுட்சியம்மன் கோயில், மாமல்லபுரம் திரௌபதி தேர் ஆகியவை பழைமையான வையாம். இவற்றைத் தவிர கங்கையும் கடாரமும் கொண்ட முதல் இராசேந்திரசோழன் காலத்திற்கு முன் அமைக்கப்பெற்ற கோயில் களில் இறைவிக்கென்று தனிக் கோயில் கிடையாது. இறைவன் முன்னிலையில் போகேசுவரி என்ற இறைவியின் செப்புச் சிலைதான் இருக்கும். முதல் இராசேந்திரசோழன் காலத்தில்தான் முதன் முதலாகத் திருக்காமகோட்டம் என்று இறைவிக்குத் தனியாகக் கோயில் அமைக்கப் பெறலாயிற்று. இருப்பினும் முதற் குலோத் துங்க சோழன் காலத்தில் இருந்துதான் இறைவிக்கென்று தனியான கோயில், கோயில் கட்டிட அமைப்பில் இடம் பெற்றது.

கலைமகள் :

கல்விக் கடவுளாகிய கலைமகள் நான்முகன் நாவில் உறைவ தாகக் கருதப்படுகின்றது. "அஞ்சத்துவச முயர்த்தோன் செந்நா" அவளது உறைவிடங்களில் ஒன்று என்பது குமரகுருபர அடி களின் திருவாக்கு.

"வடநூற்கடலும்
தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமும் தொண்டர் செந்நாவி
னின்று காக்கும் கருணைக்கடல்"

அவள். மேலும்,

"சொல்விற் பனமும் அவதானமுங் கல்விசொல்லவல்ல
நல்வித்தையும்"

தருபவள் அவள்.

"நாவிற் சரசுவதி நற்றுணை யாக
...................................
காரார் குழலாள் கலைமகள் நன்ருய்
என்நா விருக்க யானுனைப் பாட"

என்பது கந்தர் சட்டிகவசம். ஒருவன் கசடறக் கற்று உணர்ந் தவனு அல்லது கல்லா மூடனு என்பதை அவன் வாய்மொழி

தெளிவாகக் காட்டிவிடும். எனவே கலைமகளை நாவிற் குடி கொள்பவளாகக் கருதுவது பொருத்தமாகவே உள்ளது.

அலைமகள் :

திருமகள் திருமாலின் மார்பில் உறைகின்றவளாகக் கொள்ளப் படுகிருள். "திருமாதுவாழ் வாட்டமில் வனமாலை மார்பன்" எனப் பரவுகிருர் குலசேகரப் பெருமான். மங்கை மன்னனே "திருவாழ் மார்பன் றன்னை" எனப் போற்றுகிருர். "திருவிடமே மார்வம் அயனிடமே கொப்பூழ்" என்பது நம்மாழ்வார் திருவாக்கு. ஒருவன் செல்வத்தை அடையும்போது, அவன் மனம் மகிழ்ச்சியால் துள்ளி விளையாடுகிறது. அதேபோன்று அவன் செல்வத்தை இழந்த காலத்து, அவனது மனம் கடலலையெனச் கலக்கமடைகிறது. எனவே செல்வத்தின் இறைவியான செய்யாளைத் திருமால் மார்பகத்துக் கொண்டது வியப்பன்றே?

மலைமகள் :

"மலையின் மாதினை மதித்தங்கோர் பால்கொண்ட மணியை" என்று சுந்தரர் பரவினர், "மையரி கண்ணியாளும் மாலுமோர் பாகமாகி" என அப்பர் போற்றி இசைக்கிருர். "மின் திரண்டன்ன நுண்ணிடை அரிவை மெல்லியாளை யோர்பாகமாகப் பேணி" என்பது ஞானசம்பந்தர் தேவாரம். இவ்வாறு சிவபெருமானின் ஒரு பாதியாக மலைமகள் விளங்குவதாகக் கருதப்படுகிறது. "ஆண்மை நிறைந்த நிறைவே சக்தி" என்று பாரதியார் கூறி யுள்ளவாறு, வீரத்தைக் கொற்றவையாகப் போற்றினர்.

"ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறுஎறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே"

என்று அஞ்சாது போர் புரிதலே காளையின் கடமையெனக் கருதப் பட்டது.

"சிதைந்து வேருகிய
படுமகன் கிடக்கை காணுஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே"

என்பது தாயின் வீரத்தைத் தெளிவாகக் காட்டுகிறது. போரிலே ஒருவன் புறங்கொடுத்தான் எனக் கேட்ட அவனுடைய தாய் "அங்ஙனமாயின் அவன் உண்ட முலையினை அறுத்திடுவேன்" எனச் சூளுரை செய்கிருள் எனில், வீரம் எவ்வாறு போற்றப்பட்டது என்பது புலனுகும். வீரத்தின் இறைவியெனப்படும் மலைமகளைச்

சிவபெருமானின் ஒரு பாகமாகக் கருதுவது வீரத்திற்கு அளிக்கப் பட்ட முதன்மையைக் காட்டுகிறது.

நவராத்திரி : (ஒன்பது இரவுகள்)

சக்தி வழிபாட்டிற்கு உரிய முதன்மையான விழா நவராத்திரி யாகும். முதல் 3 நாள்கள் வெற்றியை நல்கும் மலைமகளுக்கும் இடையில் உள்ள 3 நாள்கள் செல்வத்தை அளிக்கும் திருமக ளுக்கும், இறுதி 3 நாள்கள் கல்வியைக் கொடுக்கும் கலைமக ளுக்கும் உரியனவாகக் கொண்டு வழிபடுவர். எல்லா நாட்களிலும் நோன்பு நோற்று வழிபட இயலாதவர்கள், இறுதி நாளன்று எல்லாக் கலைகளுக்கும் தலைவியாம் சகலகலாவல்லி எனப்பெறும் கலைமகளை வணங்குவர். எனவே அந்நாள் கலைமகளுக்கு வழிபாடு செய்யும் நாளாகக் கொள்ளப்படுகிறது.

எண்களில் 9 தனிச் சிறப்புடையதாம். 9 உடன் எதைக் கூட்டினாலும், அந்த எண் தான் வரும். எடுத்துக்காட்டாக 9 உடன் 3ஐக் கூட்டினால் 12, அதன் கூட்டுத்தொகை 3. 9ஐ எத்தனை முறை பெருக்கிக் கூட்டினாலும் 9 தான் விடையாகக் கிடைக்கும். எடுத்துக்காட்டாக 9ஐ 7ஆல் பெருக்கினால் 63, அதன் கூட்டுத் தொகை 9. எல்லாவற்றையும் 9 வகையாகப் பிரித்துள்ளனர்; நவக்கிரகங்கள், நவதான்யங்கள், நவவீரர்கள், நவரத்தினங்கள், நவபாஷாணங்கள், நவரசங்கள் ஆகியவையாம். இவை முறையே ஒன்பதுகோள்கள், ஒன்பது கூலங்கள், ஒன்பது வீரர்கள், ஒன்பது மணிகள், ஒன்பது கற்கள், ஒன்பது சுவைகள் எனப்படும். இறைவனை வாழ்த்தும் அருச்சனைப் பெயர்கள் (அஷ்டோத்திரம்) 108 கொண்டது, அஃதாவது9. ஆயிரம் திருநாமம் 1008 அஃதாவது 9, வலிமையைப் பெருக்கும் 9ஐ சக்தியைப் போற்றும் 9 இரவுகளாக-அஃதாவது-நவராத்திரி யாகக் கொண்டாடுவது சாலப் பொருத்தமே.

———

## கருத்தில் தெளிவு வேண்டும்

*சிந்தனைகளை - கருத்துக்களை நமக்குத் தருவதற்கு ஏராள மான அறிஞர்களும் - நிறுவனங்களும் - கட்சிகளும் இருக் கின்றன. ஆகவே, அவர்கள் தரும் கருத்துக்களை-சிந்தனைகளைப் பொறுமையுடன் ஆழ்ந்து கவனிக்க வேண்டும். அவசரத்தில் இன்று ஒரு கருத்துக்கு ஆட்பட்டுவிட்டு, நாளை இன்னொரு கருத்தைச் சந்தித்தவுடன் நேற்று நாம் மேற்கொண்ட போக்குச் சரியில்லை என நினைக்கும் வகையில் இயங்கக் கூடாது.*

பேரறிஞர் அண்ணா

ஆசிரியருக்குக் கடிதம் :

## அரிச் சுவடியா? அகரச் சுவடியா?

தமிழ் நெடுங்கணக்கு அடங்கிய சுவடி அரிச்சுவடி என்று அழைக்கப்படுகிறது. அரி என்றால் திருமால் என்று பொருள். தமிழ் எழுத்துகள் உள்ள சுவடிக்கும், திருமாலுக்கும் என்ன தொடர்போ? அகரச் சுவடி என்பதே பொருத்தம். எப்படி? கரம், காரம், கான் என்பவை எழுத்துகளுக்குச் சாரியைகளாக வரும்.

சாரியை என்பது சார்ந்து இயைந்து நிற்பது. இது காதுக்கு இனிமை தருவதற்கு வருவது. அ+கரம்=அகரம். அகரம்+சுவடி= அகரச் சுவடி. சுவடி=பல ஏடுகள் கொண்டது. 'அ' என்னும் எழுத்தை முதலாகக் கொண்டுள்ள சுவடி - புத்தகம் என்பது பொருள். அகரச்சுவடி என்பதே காலத்திற்கும் கருத்திற்கும் அறிவிற்கும் ஆராய்ச்சிக்கும் பொருத்தமும் பொருளும் உடையதாகும்.

'எழுத் தெனப் படுப
அகர முதல் னகர இறுவாய்
முப்ப ஃதென்ப'

என்று மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த தொல்காப்பியரும்,

'அகர முதல எழுத்தெல்லாம்'

என்று கி. மு. முதல் நூற்றாண்டில் வாழ்ந்த வான்புகழ் வள்ளுவரும் எழுதி இருப்பதை எண்ணிப்பாருங்கள். ஏது விளங்கும்.

### தமிழ் ஆண்டு

தமிழர்க்குத் தமிழில் தொடர் ஆண்டு இல்லாத குறையை உணர்ந்த தமிழ் அறிஞர்கள், சான்றோர்கள், புலவர்கள் ஆகியோர் 1921ஆம் ஆண்டு சென்னை பச்சையப்பன் கல்லூரியில் கூடி ஆராய்ந்து திருவள்ளுவர் இயேசு கிறித்து பிறப்பதற்கு 31 ஆண்டுகள் முன்பு பிறந்தவர் என்றும் அவர் பெயரில் தொடர் ஆண்டு பின்பற்றுவது என்றும் முடிவு செய்தார்கள்.

திருவள்ளுவர் ஆண்டு என்பது தை மாதத்தை முதல் மாதமாகவும் மார்கழியை இறுதி மாதமாகவும் கொண்டது. திருவள்ளுவர் ஆண்டு கண்டு பிடிக்க ஆங்கில ஆண்டுடன் 31 ஐக் கூட்டல் வேண்டும். 1981+31=2012

தமிழ்நாடு அரசு திருவள்ளுவர் ஆண்டு முறையை ஏற்று 1971 ஆம் ஆண்டுமுதல் எல்லாத்துறைகளிலும் நடைமுறைப்படுத்தி வருகிறது. தமிழர் அனைவரும் தவறாமலும் மறவாமலும் திருவள்ளுவர் ஆண்டு முறையைப் பின்பற்றுமாறு வேண்டுகின்றேன்.

வ. வேம்பையன்
(அமைப்பாளர், கல்பாக்கம் கலை அறிவியல் மன்றம்)

# குமரகுருபரர் கற்பனையில் நிலவு

[புலவர். ஆ. கந்தசாமி எம். ஏ., எம்.பில்.,

ஆய்வாளர்-உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20.]

கற்பனை :

கற்பனை என்னுஞ் சொல்லிற்கு மதுரைப் பேரகராதி பதினறு பொருள்களைத் தருகிறது. 'தமிழ் லெக்சிகன்' 'கல்' என்னும் வேர்ச்சொல் அடியாகப் பிறந்த தமிழ்ச்சொல் ஒருவகையென்றுங் 'கல்பனு' என்னும் பகுதியடியாகப் பிறந்த வடசொல் மற்ளுெரு வகையென்றுங் கூறுகிறது. ஆனுல் இன்று இலக்கியத் திறனுய் வாளர்கள் கற்பனை யென்னுஞ் சொல்லினை இல்லாததைச் சுட்டிச் சொல்லுதல், வருணனை என்ற பொருளில் வழங்குகின்றனர். பழந்தமிழிலக்கியங்களில் கற்பனை என்னுமிச் சொல் ஆளப்பட வில்லை. திருமந்திரத்தில்தான் இச்சொல் முதன்முதலாக ஆளப் பட்டுள்ளது என்பர். அதுவும் இலக்கியப்பண்பு என்ற பொருளில் வழங்கப்படவில்லை. இச் சொல் புனைந்துரைத்தல் என்றும் சேக்கிழார் காலம் (கி. பி. 12) முதற்கொண்டு வழங்கி வருவதாகக் கணக்கிடப்படுகிறது. ஆனுல் இப்போது நாம் வழங்கும் கற்பனை என்ற பொருளில் புனைவு—புனைந்துரை, கட்டியுரைத்தல், படைத்தல் போன்ற சொற்களைப் பழந்தமிழிலக்கியங்களில் காண் கின்ருேம். (குறுந் - 70; புறம் - 331; பரிபா - 6; சிலம்பு - 17 : 3 - 7)

கி. பி. 17ஆம் நூற்ருண்டைச் சேர்ந்த குமரகுருபரருடைய நூல்களில் இச் சொல்,

''காலத்தொடு கற்பனை கடந்த, கருவூலத்துப் பழம்பாடல்''
(மீனு. பி. தமிழ் - 44)

''கற்பனை கழன்று நின்ற நின்பொற்கழல் இறைஞ்சுதும்''
(சிதம. செ. கோவை - 59)

''கற்பனை கடந்த கடவுள்'' (திருவாரூர். நா. ம. மாலை - 21)

''கற்பனை கழன்று நிற்றல்'' (திருவா. நா. ம. மாலை - 25)

எனக் கற்பனை என்ற சொல்லை இல்லாததைக் கட்டிச் சொல்லுதல் (புனைந்துரைத்தல்) என்னும் பொருளில் ஆண்டுள்ளமையை அறிய முடிகிறது.

கற்பனையில் நிலவு :

அன்று முதல் இன்றுவரை நிலவின் கொள்ளையழகில் தம் உள்ளத்தைப் பறிகொடுத்துப் பாடாத கவிஞர்கள் இல்லை எனலாம். குமரகுருபரரும் நிலவைத், திங்கள், பிறை, நிலவு, மதி, அம்புலி, வெண்சுடர்க் கடவுள் என்ற சொற்களால் பலவிடங்களில் குறிப்பிடுகின்றார். நிலவு பற்றிய கற்பனை இவர் நூல்களில் ஏறத்தாழ நாற்பத்தேழு இடங்களில் வருகின்றது. அவற்றுள் சில ஈண்டு நோக்குவாம்.

முழு நிலவு நீதி உணர்த்தும் கற்பனை :

குமரகுருபரர் விண்ணையும் மண்ணையும் மிக அருகருகே கற்பனையில் காண்கின்றார். திருவாரூரில் மாடத்தில் கட்டிய கொடிகள் வானுலகம் சென்று நிலவின் வயிற்றை உடைக்க, தன் வயிற்றைக் கீண்டு வருத்திய கொடிகளின் கொடுமையை உளங் கொள்ளாது அமுதம் பொழிந்து அக் கொடிகளின் வெப்பத்தை ஆற்றிய மதியின் செயல் அறிஞர் செயலைப் புலப்படுத்துகிறது என்கிறார். இன்னா செய்தார்க்கும் இனியவே செய்கின்ற சால்பினை எடுத்துரைக்கின்றார்.

''வாணிலா அமுதம் வழங்கிய கொடிகள்
வேனிலிற் பயின்ற வெப்பம் தாற்றுபு
கொடிய ரெத்துணைக் கொடுமை செய்யினும்
மதியார் செய்திடும் உதவியை உணர்த்தும்''

(திருவா. நா. மணி மாலை - 9)

எனக் கற்பனையில் நீதியைக் கற்பிக்கும் நயம் பாராட்டத்தக்கது.

வெண்ணிலா கூற்றுவன் :

மற்றவருக்கு அமுதகுடமாகக் காட்சி தரும் நிலா, நேற்று வரை குளிர்ந்த ஒளி நல்கிய வெண்ணிலா, இன்று காதல் நோயால் வாடும் தலைவிக்குக் கூற்றுவனாகக் காட்சி தருகின்றான். கூற்றுவன் என்றால், அவனுக்கு வாகனமும் கையிலுள்ள பாசமும் வேண்டுமே! புலவரின் கற்பனை விரிகிறது. இருளாகிய எருமையை ஊர்ந்து மதியாகிய இயமன் நிலவாகிய பாசத்தை வீசுகின்றான் எனக் கற்பிக்கின்றார்.

''கருகு கங்குற் கரும்பக டூர்ந்துவெண்
கலைமதிக் கோலைக் கூற்றம் கவர்ந்துயிர்

பருகு தற்குக் கரத்தால் விரிநிலாப்
பாசம் வீசி வளைத்ததிங் கென்செய்வேன்''
(காசிக் கலம்பகம் - 77)

எனக் கூறும் கற்பனை உருவகமாய் அணி செய்கிறது.

காரச்சீலை :

காமன் கணையானது கொங்கையில் உண்டாக்கிய புண்ணை ஆற்ற நிலவொளியாகிய காரச் சீலையை வைத்தீர். புண்ணுக்குக் காரச்சீலை வைத்தால் ஆறிவிடும். ஆனால் நீர் காரம் வைத்தும் பசும்புண் பசும்புண்ணாகவே உள்ளது எனத் தலைவி ஈசனை நோக்கிக் கூறுவதாக,

''ஈரம் வைத்த இளமதி வெண்ணிலா
காரம் வைத்தென் கடம்பவ னேசனே''
(மதுரைக் கலம்பகம் - 42)

எனக் கற்பிக்கின்றார்.

நிலவின் களங்கத்திற்குக் காரணம் :

அம்பு எய்வோர் முதலில் பிற இடங்களில் எய்து பழகுதல் வழக்கம். இதனை அறிந்த கவிஞர், நிலவின் களங்கத்திற்கு அழகான காரணத்தைக் கற்பிக்கின்றார். காமவேள் இப் பெண்மானை (தலைவி) எய்து ஆவியை அழிப்பதற்கு முன்னால் நிலவிலுள்ள கலைமானை இலக்காக் கொண்டு அதன் முகத்தில் (நிலவில்) அம்பை எய்து பலநாள் பழகினான். அப்போது, அதன் முகத்திலேற்பட்ட புண்கள்தாம் இப்போதும் களங்கம்போல் விளங்குகின்றன எனத் தற்குறிப்பேற்ற அணி அமைத்து,

''மாரன்
சிலைமுகக் கணைக்கெம் ஆவி செகுத்துண வருத்தத் திங்கட்
கலைமுகம் போழ்ந்த காயங் களங்கமாய் விளங்குமாறே''
(காசிக்கலம்பகம் - 61)

எனக் கற்பிக்கும் திறம் சுவை பயக்கிறது.

வெண்ணிலா பிழைத்தது :

கள்ளைக் குடித்த மகளிர் மயக்கத்தால் திங்களைத் தேனிருலென்று கருதி அதனை விரும்புகின்றனர். கண்ணின் கடைவிழியைக் காதலியர் காட்டிவிட்டால் மண்ணில் குமரர்க்கு மாமலையும் சிறுகடுகல்லவா ? உடனே, ஆடவர் அந் நிலவினைத் தாவிப் பிடித்துப் பிழியத் தொடங்குகின்றனர். இதனை அறிந்த நிலவு,

பெண்களின் முகத்துக்கு ஒப்பென்று (கவிஞர்கள்) கருதியதால் தனக்கு ஏற்பட்ட தண்டனை போலும் இஃது எனக் கருதியது. 'நான், மகளிர் முகத்திற்கு ஒப்பென்று சொல்லவில்லையே' என்று சொல்லி விடுபட்டுச் சென்று மகிழ்ந்தது (மதுரைக் கலம்பகம் - 15) என்ற கற்பனை வெறுங் கற்பனை ஆயினும் வியப்பை ஏற்படுத்தி,

''மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி''

என்ற குறளோடு ஒப்பிட்டுச் சிந்திக்கச் செய்கிறது.

பிறை நிலவு :

முழுநிலவில் முகிழ்த்த கற்பனை போன்றே பிறை நிலவில் அரும்பிய கற்பனையும் நம் நெஞ்சைப் பிணிக்கின்றது.

முழுநிலவு குறை நிலவானதற்குக் காரணம் :

மாடத்திலுள்ள கொடிகள் நிலவில்பட்டுத் தேய்கின்ற காரணத்தால் முழுநிலவு குறைமதியாயிற்று எனக் கூறும் கவிஞர் வேறொரு காரணத்தையும் கற்பிக்கிறார். முழுநிலவு நாளுக்கு நாள் தேய்ந்து உடல் கூனி, ஒளி குன்றிப் போவது ஏன்? என்ற வினா கவிஞரின் உள்ளத்தில் எழுகிறது. உலகில் 'கயரோகம்' கண்டவர்கள் நாளுக்கு நாள் மெலிந்து வலிவிழந்து பொலிவழிந்து போவதைக் கண்ட கவிஞருக்குக் காரணம் விளங்குகின்றது. நிலவுக்குக் கயரோகம் கண்டுவிட்டது. அதனால்தான் (நிலவு) நாளுக்கு நாள் குறைகிறது என்று கூறுகின்றார்.

''கயரோக முடன் கறையுந் துடைத்திடக்
கருதிடுதியேல்'' (முத்துக். பி. தமிழ் - அம்புலி - 5)

மின்னார் செஞ்சடைமேல் மிளிர்கின்ற பிறை நிலவு :

சிவபெருமான் திருமுடியில் விளங்கும் பிறையைப் பற்றியும் பல இடங்களில் குறிப்பிடுகின்றார் குமரகுருபரர். அவற்றுள், கற்பனைக் கண்கொண்டு பார்க்குமிடங்கள் பல. அவற்றுள் சிலவற்றை ஈண்டு நோக்குவோம்.

வானில் உள்ள பிறை நாளுக்கு நாள் வளரச் சிவபெருமான் முடியில் உள்ள பிறையானது என்றும் வளராது இருப்பதற்குக் காரணம் என்னவென்று சிந்திக்கின்றார்; ஒரு காரணத்தைக் காண்கின்றார். அரவு முழுமதியையே உண்ணுமென்பது நம்பிக்கை. எனவே, தான் வளர்ந்தால் சிவன் கழுத்தில் உள்ள பாம்பு தன்னை

விழுங்குமோ எனக் கருதி உள்ளத்தில் அச்சம் கொண்ட காரணத்தால் அது வளராது என்றும் பிறையாகவே இருக்கின்றது எனக் கூறி, அதற்கு ஓர் உவமையையும் அழகாக எடுத்தாளுகின்ருர். தவம் செய்வோர் காம உணர்வுக்கு அஞ்சித் தம் உடலை வாட்டி ஊனுெளி சுருக்குதல் போல் (பிறை) உள்ளது என்கிருர்.

''மன்றுடையான் செஞ்சடைமேல் வாளரவுக் குள்ளஞ்சி
என்றுமதி தேய்ந்தே இருக்குமால்—நின்றுதவம்
செய்யுமுனி வோர்காமத் தீப்பிணிக்கஞ் சித்தமது
பொய்யுடலை வாட்டுமா போல்''

(சிதம்பர மும்மணிக் கோவை - 24)

எனத் துறவியரின் மனநிலையை இணைத்துக் காட்டும் கற்பனை சிந்திக்கத்தக்கது.

பொன் செய்கிழக் கொல்லன் :

பொற்கொல்லன் பொன்னை உருக்கி அணிகலன் செய்வதையும் அவ்வாறு செய்யும்போது தேவைப்படும் நெருப்பு, கரி, தீயிலுருகும் பொன் முதலியவற்றையும் அருகில் நகை செய்யக் காத்திருக்கும் பெண்ணையும் பார்த்திருக்கிருர். இவ்வாறு முன்பு கண்ட நிகழ்ச்சி கவிஞரின் உள்ளத்தில் உறைந்து பின்பு கற்பனையாய் வெளிப்படுகின்றது. சிவபெருமான் திருமுடி நெருப்பாகவும் அச் சடையில் கண்ணியாக அணிந்துள்ள கொன்றை மலர் தீயில் நகை செய்யும் பொருட்டு வைத்த பொன்னாகவும், அக் கொன்றை மலரைச் சூழ்ந்துள்ள வண்டுகள் நெருப்புக்கருகிலுள்ள கரியாகவும் அருகிலுள்ள கங்கை, அணியைச் செய்வித்தற்குப் பக்கத்தில் காத்திருக்கும் பெண்ணாகவும், முடியிலுள்ள பிறை வெண்மையான நிறத்தாலும் உடல் வளைந்திருக்கின்ற தோற்றத்தாலும் தலை நரைத்து உடல் கூனியுள்ள பொற்கொல்லனாகவும் காட்சியளிக்கின்றன எனக் கற்பனையால் இணைத்துப் பார்க்கும் திறன் வியப்பூட்டுகின்றது.

''தன்னெக்குஞ் செல்வக் கமலைப் பிரான்செஞ் சடாடவிமற்
றென்னெக்கு மென்னின் எரியொக்கும் கொன்றை யெரியிலிட்ட
பொன்னெக்கும்; வண்டுகரியொக்கும் கங்கையப் பொன் [செய்விக்கும்
மின்னெக்கும் பொன்செய் கிழக்கொல்ல னெக்குமவ் [வெண்பிறையே''

(திருவாரூர் நான்மணிமாலை - 35)

என்பதே அப் பாடல்.

தன் ஆகம்போல் நிலவையும் பாகம் பிரித்தானே :

சிவன் திருமுடியில் பாதி பிறையும் அம்மையின் திருமுடியில் பிறை என்னும் தலையணியும் விளங்குதலைக் கண்டார் கவிஞர். அவர் உள்ளத்தில் கற்பனை ஊற்றெடுக்கிறது. நிலவு பாதியான காரணத்தைக் காண்கிறார். இறைவன் உமைக்குத் தன் உடலில் பாதியைப் பகிர்ந்தளித்தபோது தானணிந்திருந்த திங்களையும் பாதியாகப் பகிர்ந்தளித்தாரோ என்று சுவைபட நவில்கின்றார். (சிதம். செய்யுட்கோவை - 48).

பிறை சிவந்தது ஏன்?

சிவபெருமானின் மின்னார் செஞ்சடையின் ஒளி வெண்மை நிறமுடைய பிறையின்மீதும் கங்கைமீதும் பட்டு அவையும் செந்நிறமடைகின்றன. இதற்கு வேறொரு காரணத்தைக் கற்பிக்கிறார் குமரகுருபரர். சிவபெருமான் அம்பிகையின் ஊடலை நீக்கும் பொருட்டு வணங்கும்போது அம்மையின் திருவடியிலுள்ள செம்பஞ்சுக் குழம்பு பட்டு இறைவன் திருமுடியிலுள்ள பிறையும், கங்கையும் செந்நிறமடைந்தன என்பதனை,

*''செம்பஞ்சியின் குழம்பாற்*
*தெள்ளமு திறைக்கும் பசுங்குழவி வெண்டிங்கள்*
*செக்கர்மதி யாக்கரை பொரும்''*

*(மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் - வருகை - 5)*

என்கின்றார்.

மயக்கும் கற்பனை :

மரபு வழிப்பட்ட கற்பனையை இவர் பாடல்களில் காண முடிகிறது. விநாயகர், சிவபெருமான் திருமுடியிலுள்ள பிறையைத் தம் கொம்பென்று எண்ணி அதனைப் பற்றத் தம் துதிக்கையை நீட்டுகின்றார். அத் துதிக்கையைத் தனக்குப் பகையாகிய பாம்பென் றெண்ணிய பிறை நிலவு அஞ்சி அருகில் உள்ள கங்கை யாற்றில் செல்ல, அப் பிறையை விநாயகர் தோணி என்று கருதி அதனைப் பற்றுவதை விட்டார்.

*''மாமதியினைத் தனது கோடென வெடுப்பமத*
*மாமுகன் முகக்கை தொடவத்*
*தாமதி பணிப்பகை யெனுவர நதிப்புகவோர்*
*தோணியென விட்டகலுமே''* (சிதம். செ. கோவை-53)

என்னும் பகுதியில் கற்பனை மயக்கணியாய் அமைந்து நம் மனத்தை மயக்குகிறது. இதனாலன்றோ அணி இலக்கணத்திற்கு முதுகெலும் பாயிருப்பது கற்பனை என்று இயம்புகின்றனர்!

பொதுவாக இவர் பாடல்களில் தற்குறிப்பேற்றம் முதலிய அணிகளில் கற்பனையமைந்து சிறப்புறுகிறது.

இறைவனை உணரவும் உணர்த்தவும் கற்பனையைப் பயன் படுத்திய குமரகுருபரர் வாழ்ந்த காலம் புராணங்கள் பழமரபுக் கதைகள் என்னும் நிலையில் கற்பனை ஆட்சி மிக்குப் பெருகிய காலமாகும். கற்பனையானாலும் அது பொருள்களின் இயல்பைச் சார்ந்து அமைதல் வேண்டும் என்ற முற்கால நிலை மாறி, பொருள் களின் இயல்பைச் சாராத மிகைக் கற்பனைகள் போற்றப்பெறும் நிலை இக் காலகட்டத்தில் நிலவியதை உணரமுடிகிறது. இயற்கையின் ஒவ்வொரு கூற்றிற்கும் காரணம் கற்பிக்கும் விழைவு, கற்போர் வியக்கும் வண்ணம் வியப்புச் சுவையை இலக்கியத்தில் பெருக்கும் வியப்பு ஆகிய இரண்டும் இவர் கற்பனையில் இடம் பெறுவதை உணர முடிகிறது. எனவே, பண்டு சோலை மலர்க ளாக இருந்த கற்பனை இவர் பாடலில் வான் பூக்களாக விண் சென்று ஒட்டி விண்மீன்களாகிக் கண் சிமிட்டுகின்றன. இயற்கைக் கற்பனை குன்றி மிகைக் கற்பனையும், வெறுங் கற்பனையும் அமைந்து இலக்கியத்துக்குக் கற்பனை துணையாகி இருந்த நிலை மாறி, கற்பனையே இலக்கியத்தின் அடிப்படை உயிர் நிலையான இடைக்கால இலக்கியப் பண்பே இவர் பாடல்களிலும் உள்ள தென்ற முடிவுக்கு நாம் வரவேண்டியுள்ளது.



## நூல் நிலையத்தில் கிடைப்பது என்ன ?

*“ஒரு நூல் நிலையத்தில் உனக்குக் கிடைப்பது என்ன என்பதை நினைத்துப்பார்! ஆயிரக்கணக்கான ஆண்டுக ளிடையே உலகில் பல நாடுகளிலும் வாழ்ந்தவருள் தலைசிறந்த அறிஞர், சொற்செல்வர், கலைப்பண்பாளர் தம் கல்வியின் பயனை - அறிவின் பயனை தலைசிறந்த கருத்துக்களைத் தலைசிறந்த முறையிலும், ஒழுங்கிலும் தொகுத்த தொகுப்புக் களின் சூழல் உன்னுடன் உறவாடக் காத்திருக்கின்றது. தன் உயிர்த் தோழனுக்குக் கூட அவர்கள் முற்றிலும் மனந் திறந்து உரைத்திருக்க மாட்டாத உயர் அருங்கருத்துக்கள் தெள்ளத் தெளிய வரையப்பட்டு, ஏதோ ஓர் ஊழியில் வரும் உன்னிடம் தரப்பட்டுள்ளன!”*

—எமர்சன்.

# கோலார் பொன்வயல் நூற்றாண்டுவிழா

தென்னிந்தியாவில் பெங்களூருக்குக் கிழக்கே 100 கி. மீ. தொலைவிலும் சென்னைக்கு மேற்கே 300 கி. மீ. தொலைவிலும் அமைந்துள்ளது கோலார் பொன்வயல். இதன் பரப்பு தெற்கு வடக்காக ஏறக்குறைய 80 கி. மீ. நீளமும், 6 கி. மீ. அகலமும் உடையது.

இங்கு நிலத்திற்கடியில் புதைந்து கிடக்கும் பொன்னை அகழ்ந் தெடுக்கத் துவங்கிக் கடந்த 1980ஆம் ஆண்டுடன் நூறாண்டுகள் நிறைவுற்றதை முன்னிட்டு 20—12—80 அன்று கோலாரில், பாரதப் பொன் சுரங்கங்களின் பழம்பெரும் பணியாளர் திரு. ஜான் என்பவர் தலைமை தாங்க, இந்தியத் தலைமை அமைச்சர் திருமதி இந்திராகாந்தி அவர்கள் முன்னிலையில் நூற்றாண்டு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது.

வரலாறு: நிலத்தை அகழ்ந்து பொன் எடுக்கும் முயற்சி 1880ஆம் ஆண்டில்தான் பயன்தரத் துவங்கிற்று. அதுகாறும் பல இன்னல்களும் இழப்புக்களுமே நிலவிவந்தன. கோலாரில் பொன் கிடைத்தற்கான வாய்ப்பு உண்டு என்பது இற்றைக்கு 200 ஆண்டுகட்கு முன்னர்த்தான்—அஃதாவது திப்புசுல்தான் ஆட்சிக் காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டது. அதுமுதல் பொன் எடுக்கப் பல முயற்சிகள் நடைபெற்றன. 1880இல் "ஜான் டெயிலர் அண்டு சன்ஸ்" என்னும் புகழ்பெற்ற சுரங்கப்பணி நிறுவனத் தாரால் நிலத்தை அகழ்ந்து பொன் எடுக்கும் பணி துவங்கப் பெற்றது.

இந்த நிறுவனம் தனித்தனியாக 5 குழுவினரால் நடத்தப் பெற்று வந்தது. 1956ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 26ஆம் நாள், இச் சுரங்கங்கள் மைசூர் அரசினரால் நாட்டுடைமை யாக்கப் பட்டுக் கோலார் பொன்வயல் (K.G.F.) என்று அழைக்கப்பட்டது. பின்னர் 1962இல் இந்திய அரசினர் இச் சுரங்கங்களைத் தமது பொறுப்பில் எடுத்துக்கொண்டனர்.

உலகத்திலுள்ள ஆழமான சுரங்கங்களுள் இக் கோலார் சுரங் கங்களும் சிலவாகும் எனக் கருதப்படுகின்றன. இவற்றின் ஆழம் 3·2 கி. மீ. ஆகும். கற் பிளந்து, மலை பிளந்து, கனிகள் வெட்டிப் பணியாளர் பலர் பட்ட பாடுகளின் விளைவாக இதுகாறும் 738·3 டன் எடையுள்ள பொன் எடுக்கப்பட்டுள்ளது.

———

# *தொல்காப்பியம்—ஒரு வழுவமைப்பு நூலுமாம்

[மயிலம், ஆ. சிவலிங்கனுர்,

உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை-20.]

வழுவும் அமைப்பும் :

உலக நடைமுறையில் தவறுகள் நேரும்போது அத் தவறுகளைப் போக்கவோ திருத்தவோ அறச் சட்டங்கள் உருவாகும். கள்ளுண்டு தீங்கடைந்தது கண்டமையால் "உண்ணற்க கள்ளை"[1] என்று ஆணையிட்டனர் முன்னோர். தவறு நடந்தாலும் அதனுல் ஏதேனும் நன்மை விளையுமானுல் அத் தவறும் செய்யலாம் என்று ஒரு திருத்தமும் முன்னோர் கொண்டுவந்தனர். பொய் சொல்வது தீது எனக் கண்டமையால் "தன்னெஞ் சறிவது பொய்யற்க"[2] என்று ஆணையிட்டவர், அப் பொய்யினுல் நன்மை விளையுமென்றால் அது தள்ளப்பட வேண்டுவதில்லை; ஏற்கப்படலாம் என்றும் ஒரு திருத்தம் கொண்டுவந்தனர்.

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்"[3]

என்பது அத் திருத்தம்.

இலக்கணம்—வழுவமைப்பு :

உலக நடைமுறைக்கு ஏற்பட்ட அறச் சட்டங்கள் போன்றனவே இலக்கண நூல்களும் என்னலாம். உலக வழக்கில் காணப்பட்ட எழுத்து, சொல், பொருள் ஆகியவற்றில் குறைபாடோ தவறோ இல்லாதவரையில் அவைபற்றிய இலக்கணங்கள் தேவையில்லை. †இன்றுள்ள இலக்கண நூல்கள் எல்லாம் குறைபாடுகளை-தவறுகளைக் கண்டு நீக்கவும், திருத்தவும் எழுந்தனவேயாம். எனவே அவ்விலக்கண நூல்களை 'வழுவமைப்பு நூல்' என்ற வேறு பொதுப் பெயராலும் வழங்கலாம். அம்முறையில் தமிழில் உள்ள தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலும் 'ஒரு வழுவமைப்பு நூல்' என்று கொள்வதில் தவறில்லை.

தொல்காப்பியம் தோன்றக் காரணம் :

'தொல்காப்பியர் தமிழ்கூறு நல்லுலகத்தில் வழங்கிய எழுத்து, சொல், பொருள் (நடைமுறை) ஆகியவற்றை உலக வழக்கையும்

---

†எழுத்து, சொல், பொருள் பற்றிய நூல்கள்.

*20—6—80-ல் உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் நடைபெற்ற கருத்தரங்கில் படிக்கப்பட்டது. நிறுவன இயக்குநர்க்கு நன்றி.

செய்யுள் வழக்கையும் அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்தும், தமக்கு முந்து நூல்களைக் கண்டு ஒப்பு நோக்கியும் அவை மயங்காதபடி முறைப்பட எண்ணித் தொல்காப்பியம் என்ற நூலைச் செய்தார்' எனப் பனம்பாரனார் கூறினார்.[4] அவர் கூற்றிலிருந்து, தொல்காப்பியர் காலத்தில் உலக வழக்கிலும், செய்யுள் வழக்கிலும் எழுத்து, சொல், பொருள் ஆகியவை மயங்கு நிலையில் தவறுடையனவாகவும் இருந்துள்ளன என்பது பெறப்படும். அதனால் தொல்காப்பியர் நூல் செய்தற்கான காரணம் எழுத்துச் சொற்பொருள்களில் ஏற்பட்ட தவறுகளைப் போக்கவும் திருத்தவும் எண்ணியதே என்னலாம். அதனால் தொல்காப்பியம் ஒரு வழுவமைப்பு நூல் என்று கூறலாம். அதற்கேற்பத் தொல்காப்பியத்தின் அமைப்பு முறையும் அமைந்துள்ளது.

**முதல் நூற்பா :**

தொல்காப்பியத்தின் முதல் நூற்பா,

"எழுத்தெனப் படுப
அகரமுதல் னகரவிறுவாய்
முப்பஃ தென்ப
சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே"

என்பது. இதில் எழுத்தெனப் படுப அகரமுதல் னகர இறுவாய் முப்பஃ தென்பதே குறிப்பிடப்பட வேண்டுவதாம். அவ்வாறு குறிப்பிடப்படின் தனியெழுத்துக்களாகிய சார்பெழுத்துக்கள் மூன்றும்[6] விடுபடும். அச் சார்பெழுத்துக்களையும் சேர்த்து முப்பத்து மூன்று என்றால் சிறப்பில்லாச் சார்பெழுத்துக்கள் சிறப்புடைய எழுத்துக்களாக எண்ணப்பட்டுவிடும். எனவே, எழுத்து எத்துணை எனக் கூறவந்த ஆசிரியர்க்கு நூல் தொடங்கும்போதே எழுத்தைப் பற்றிய மயக்கம் நேர்ந்துவிட்டது. அதனால் ஆசிரியர் 'சார்ந்துவரல் மரபின் மூன்றலங்கடை முப்பஃது என்ப' எனச் சுற்றி வளைத்துக் கூறினார். முப்பது என்றால் சார்பெழுத்துகள் தனி எழுத்துகளாதலின் விடுபடும் குற்றமும், முப்பத்து மூன்று என்றால் சார்பெழுத்துகளும் சிறப்பெழுத்துகளாகும் என்ற குற்றமும் நேரும் ஆகலின் அவ்வாறு கூறினார். எனவே, 'இம்முதல் நூற்பாவே இந் நூலானது பெரிதும் வழுவினைப் பற்றியதாகவே அமையும்' என்பதைக் குறிப்பால் உணரவைக்கின்றது' என்னலாம்.

**இறுதி நூற்பா :**

இனி இந்நூலின் இறுதி நூற்பாவும் வழுவமைப்பு பற்றியதே என்பதையும் காணலாம். "ஒத்த காட்சி யுத்திவகை விரிப்பின்"[7] எனத் தொடங்கி முப்பத்திரண்டு உத்திகள் கூறுகிறது அந் நூற்பா

அவ் வுத்திகளிற் பல வழுக்கள் தொடர்பானவையே. ‘உத்தி’ என்பது ‘அறிவை உய்த்துக் காணப்படுவது’ என்ற பொருளுடையது. எனவே, வெளிப்படையாக இல்லாமல் அறிவினால் கூர்ந்துணருமாறு அமைவதும் ஒருவகையில் வழுவேயாம். மொழிந்த பொருளோடொன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல், வந்தது கொண்டு வாராதது உணர்தல், வாராததனால் வந்தது முடித்தல், தலை தடுமாற்றம், உடம்பொடு புணர்த்தல், அறியாது உடம்படல், பொருள் இடையிடுதல், தந்து புணர்ந்துரைத்தல், ஞாபகம் கூறல், உய்த்துக்கொண்டுணர்தல் ஆகிய உத்திகள் எல்லாம் வழுவின் தொடர்பாவனவே என்பதில் ஐயமில்லை. அவ் வழுக்கள் உய்த்துணர்ந்து அமைத்துக்கொள்ளப் படுதலின் இறுதி நூற்பாவும் வழுவமைப்பு நூற்பாவாகும் என்பதில் ஐயமில்லை.

உத்திகள் யாவும் வழுவின்பாற் படுவனவே என்பது பேராசிரியர் கருத்தாம். இதை அவர், ‘ஒத்த காட்சியின் உத்திவகை’ என்ற தொடர்க்கு,

> ‘‘முற்கூறிய குற்றங்களோடு ஒப்பத் தோன்றும்
> தோற்றத்தினை யுடையவாகிய உத்திக்கூறு’’[8]

என உரை எழுதியதால் உணரலாம். ‘ஒத்த காட்சியின் உத்தி வகை’ என்ற நூற்பாவின் முன் நூற்பா, கூறியது கூறல் முதலிய பத்துக் குற்றங்களைக் கூறியதாகும்.[9] அதனால் ‘ஒத்த காட்சி’ என்பதற்கு ‘முற்படக் கூறிய குற்றங்களோடு ஒப்பத் தோன்றும் தோற்றம்’ என உரை யெழுதினார் அவர்.

இளம்பூரணரும் ‘அது (உத்தி) சூத்திரத்தின்பாற் கிடப்பதோர் பொருள் வேறுபாடு காட்டுவது’[10] என்று ‘உத்தி’ என்பதற்கு விளக்கம் கூறுமுகத்தான் ‘வழுவின்பாற் படுவனவே உத்திகள்’ என்ற கருத்தினர் ஆனார் எனக் கொள்ளலாம்.

எனவே, தொல்காப்பியத்தின் முதல் நூற்பா வழுவை நினைவுபடுத்துவதும், இறுதி நூற்பா வழுவை அமைப்பதும் நோக்கின் இவற்றின் இடைப்பட்ட நூற்பாக்களிற் பலவும் வழுவின் தொடர்பாகவே கூறப்பட்டன எனவும் அறியலாம்.

### எழுத்ததிகாரத்தில் வழுவமைப்பு:

எழுத்ததிகாரத்தில் உயிர் எழுத்துக்கள் மெய்யெழுத்துக்கள் எனப் பெயர் வைத்த குறியீடுகளும், மகரக்குறுக்கம், அளபெடை முதலியனவும், புணர்மொழிகளிற் காணப்படும் எழுத்து மாற்றங்களும், சாரியைப் பேறும், அச் சாரியைகளின் திரிபுகளும் பிறவும் வழுவமைப்புகளாகவே கருதப்படுவன.

சொல்லதிகாரத்தில் வழுவமைப்பு :

சொல்லதிகாரத்தில் முதல் இயலாகிய கிளவியாக்கம் என்பது, வழுக்களைந்து சொற்களை ஆக்கிக் கொண்டமையால் அப் பெயர் பெற்றது எனச் சேனாவரையர் கூறியதற்கேற்ப[11] வழுக்களும், அவை வாராமற் காத்தலும், வரின் அமைத்துக் கொள்ளுமாறும் கூறுதலைக் காணலாம். வேற்றுமை மயங்கியல் என்பது தன் பெயராலேயே வழுவின் தொடர்பானது என்பதைத் தெரிவித்துக்கொண்டிருக்கிறது. எச்ச வியலில் வரும் பொருள் கோள்கள், தொகைகள், கால மயக்கங்கள், எச்சத் திரிபுகள் முதலிய எல்லாம் வழுவைப் பற்றியனவே என்பதில் ஐயமில்லை.

பொருளதிகாரத்தில் வழுவமைப்பு :

இனிப் பொருளதிகாரத்தில் அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் ஆகியவை உலகின் நடை முறைகளை ஒழுங்குபடுத்திக் காட்ட வந்தன என்பதால் அவற்றிற் கூறப்பட்ட செய்திகளும் வழுவின் தொடர்புடையனவே. எல்லா வொழுக்கமும் எல்லா நிலத்தும் நடை பெறுவனவே யென்றாலும் பாடல் சான்ற புலனெறி வழக்கிற்காகக் குறிஞ்சிக்குப் புணர்தலும், முல்லைக்கு இருத்தலும் என்பன போல ஒரு நிலத்துக்கு ஓர் ஒழுக்கமாக அமைத்ததும் நினைத்துப் பார்க்கின் வழுவேயாம்.

"திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே"[12]
"உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறுமே"[13]
"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும்"[14]

என்பன போல்வன வெல்லாம் வழுவமைப்புகளே. களவொழுக்கம் என்பது தன் பெயராலேயே வழுவுடையது என்பதைக் காட்டி நிற்கிறது. அவ் வொழுக்கத்தில் 'உடன் போக்கு' முதலியனவும் வழுவேயாம். கற்பிலும் பரத்தையர்ப் பிரிவு முதலிய வழுக்களும் அமைப்புகளும் உண்டு. புறத்திணையிலும் வெட்சியாகிய ஆநிரை கோடல் வழுவான செய்தியன்றோ? உவமம் கூறிய இயலிலும் பொருளே உவமம் செய்தலும், தடுமாறு வரலும் போல்வன வழுவமைப்பல்லவோ? இறுதியியலாகிய மரபியலிலும் வழுவமைப்புகள் உண்டு. பறவையின் ஆணுக்குரிய 'சேவல்'[15] என்ற பெயரால் 'குதிரையுள் ஆணினைக் கூறலும்'[16] கடியப்படாது என்பது கூறப்பட்டது காணலாம்.

முடிப்புரை :

பொதுவாக எல்லா இயல்களிலும் தனித்தனியாகவும் நூலின் முடிவில் பொதுவாகவும் வந்த புறனடைச் சூத்திரங்கள் யாவும் வழுவமைப்புகளே.

எனவே தொல்காப்பிய நூல் ஒரு வழுவமைப்பு நூல் என்பதில் ஐயமில்லை. வழுவற்றன கூறியே வழு என்பவை யாவை என்றும், அவை தள்ளப்பட வேண்டும் அல்லது அமைத்துக் கொள்ளப்பட வேண்டும் என்றும் கூற வேண்டுமாதலின் தொல்காப்பியத்தில் வழுவற்றனவும் உடன் கூறப்பட்டன என்னலாம்.

எண்ணுக் குறிப்பு :

1. திருக்குறள் 922
2. ஷை 293
3. ஷை 292.
4. தொல். சிறப்புப்பாயிரம்.
5. தொல்காப்பியம். 1
6. சார்பெழுத்துகள் தனியெழுத்துகளே.
7. தொல் - பொருள் - மரபு. 112
8. ,, ,, ,, ,, பேராசிரியர் உரை.
9. ,, ,, ,, 111.
10. ,, ,, ,, 112 இளம்பூரணர் உரை.
11. சொல். 1 சேனவரையர் உரை.
12. தொல்.பொருள் அகத்திணையியல். 14.
13. தொல். பொருள். அகத். 15
14. ,, ,, ,, 21
15. ,, ,, ,, 49
16. ,, ,, ,, 69

---

# செய்திகளும் குறிப்புக்களும்

## முப்பத்தெட்டாவது தமிழிசை விழா

தமிழிசைச் சங்கத்தின் முப்பத்தெட்டாவது இசை விழா 21—12—80 அன்று இராசா அண்ணாமலை மன்றத்தில் இசைப் பேரறிஞர் திரு. மீ. ப. சோமசுந்தரம் (சோமு) அவர்கள் தலைமையில் சிருஞ்சிறப்புமாக நடைபெற்றது. சீர்காழி கோவிந்தராசன் அவர்களின் கடவுள் வாழ்த்துப் பாடலுடன் விழா துவங்கிற்று. செட்டி நாட்டரசர் முனைவர் இராசா சர் முத்தைய செட்டியார் வரவேற்புரை நிகழ்த்தினர். தமிழக நிதி அமைச்சர் மாண்பு மிகு முனைவர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தொடக்க உரை ஆற்றினர்.

நாவலர் அவர்கள் தமது தொடக்கஉரையில் தமிழிசையின் மாண்பினை இலக்கியச் சான்றுகளுடன் இனிது விளக்கினர். திரு. மீ. ப. சோமு அவர்கள் தமது தலைமை உரையில் இசையின் நுணுக்கங்கள் பற்றியும் தேவார திருவாசகப் பண் நயங்கள் பற்றியும் விரிவாகப் பேசினர்.

வழக்கம்போல் இவ் விழாவின் தொடர்பாகப் பண் ஆராய்ச்சிக் கூட்டங்களும் முறையே 22, 23, 24 ஆம் நாள்களில் நடைபெற்றன.

## தனித் தமிழ்க் கழகம், புதுவை

5—12—80 இல் கூடிய இக் கழகம் ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டினைப் பாராட்டி நிறைவேற்றிய தீர்மான மொன்றில் மதுரையில் மறைமலையடிகளார்க்குச் சிலை அமைக்குமாறு அரசினைக் கேட்டுக் கொண்டதுடன், சென்னைக் கடற்கரை, பல்லாவரம் ஆகிய இடங்களிலும் அடிகளாருக்குச் சிலை அமைக்குமாறு கேட்டுக் கொண்டது.

## முதறிஞர் இராசாசி 103ஆவது பிறந்தநாள் விழா

முதறிஞர் இராசாசி அவர்களின் 103 ஆவது பிறந்த நாள் விழா தமிழ் நாடு அரசின் சார்பில் 14—12—80 இல் சென்னைக் கலைவாணர் அரங்கில் சிறப்பாக நடைபெற்றது. முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் உரைக் கோவையும், உயர்நீதிமன்ற நடுவர் ஆர். செங்கோட்டு வேலன் ,அவர்கள் தலைமையில் சிறப்புக் கூட்டமும் நடைபெற்றன. பல்வேறு பொருள்கள் பற்றி அரசியல் தலைவர்களும், அறிஞர்களும் சிறப்புரையாற்றினர்.

## முப்பெரும் இசுலாமிய தமிழ் இலக்கிய விழா

மீரா ஃபௌண்டேஷன் சார்பில் 20—12—80 இல் சென்னைக் கோகலே மண்டபத்தில் சீறாப் புராணத் தொடர்ச் சொற்பொழிவின் 25 ஆவது கூட்ட நிறைவு விழா; ‘புதூ குஷ்ஷாம்’ தொடர்ச் சொற்பொழிவின் தொடக்க விழா; தமிழில் ‘‘இசுலாமிய மெய்ஞ்ஞான இலக்கியங்கள்’’ ஆய்வு நூல் வெளியீட்டு விழா ஆகியன ஒருங்கிணைந்த முப்பெரும் இசுலாமியத் தமிழ் இலக்கிய விழாவாக நடைபெற்றது. தலைமை நீதிபதி மாண்புமிகு மு. மு. இசுமாயீல் அவர்கள் தலைமை தாங்கினார்கள். எஸ். எம். சுலைமான் ஐ. ஏ. எசு., எம். அப்துல் வகாப் எம். ஏ., பி. எச் டி., முனைவர். ச. வே. சுப்பிரமணியம், முனைவர் அவ்வை நடராசன், கவிஞர் முகம்மது மேத்தா, சிலம்பொலி செல்லப்பனார் ஆகியோர் உரையாற்றினர்.

## சிறப்பு நூல்கள் வெளியீட்டு விழா

31—12—80 இல் கலைவாணர் அரங்கில், தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனத்தின் சார்பில் சட்டப் பேரவைத் தலைவர் மாண்புமிகு க. இராசாராம் அவர்கள் தலைமையில், தமிழ்ச் சுருக்கெழுத்து அகராதி, ஓலைச் சுவடிகள், சேயூர் முருகன் உலா ஆகிய நூல்களின் வெளியீட்டு விழா நடைபெற்றது. தலைமை நீதிபதி முனைவர் மு. மு. இசுமாயில், மாண்புமிகு அமைச்சர் செ. அரங்கநாயகம், மாண்புமிகு முனைவர் ம. பொ. சிவஞானம் ஆகியோர் முறையே நூல்களை வெளியிட்டுப் பாராட்டுரை வழங்கினர்.

## திருவள்ளுவர்—ஒரு சமுதாயப் பார்வை நூல் வெளியீட்டு விழா

மதுரை, மீனாட்சி புத்தக நிலையத்தின் சார்பில் 1—1—81 அன்று மதுரை - இராமநாதபுரம் வர்த்தக சங்கப் பேரவை அரங்கில், கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள் தலைமையில், முனைவர் எஸ். இராம கிருட்டிணன் அவர்கள் எழுதிய ‘‘திருவள்ளுவர்—

ஒரு சமுதாயப் பார்வை" என்னும் நூல் வெளியீட்டு விழா நடைபெற்றது. முனைவர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் நூலை வெளியிட்டார். திரு. ஜெயகாந்தன், முனைவர் சக்தி பெருமாள் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். 'நேரு இலக்கிய விருது' பெற்ற ஜெயகாந்தன் அவர்களுக்கும் பாராட்டுக்கள் வழங்கப் பெற்றன.

## திருவெம்பாவை – திருப்பள்ளியெழுச்சி சொற்பொழிவுகள்

சென்னை, இராயப் பேட்டை பாலசுப்பிரமணிய பக்தசன சபையின் சார்பில் 1—1—81 முதல் 10—1—81 முடிய. நாடோறும் மாலை 6 மணி முதல் 8 மணி வரை, திரு. ஆ. தி. அ. ஈசுவர முதலியார் A. M. N, F. Sc. அவர்கள் 'திருவெம்பாவை—திருப்பள்ளியெழுச்சி' சொற்பொழிவு நிகழ்த்தினர்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை
## (செல்வி சிலம்பு, டுடு-கசுகஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5—00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | வ. வேம்பையன் அவர்கள், கல்பாக்கம் | 8—00 |
| ,, | உச்சிப் பிள்ளையார், திருச்சி | 5—00 |

மறைமலையடிகள் கலைமன்றத்திற்குத் தம்மிடமிருந்த 'திருக்கோவில்' 'தருமசக்கரம்' மாத வெளியீடுகளை அன்பளிப்பாக அளித்த புலவர் ரா. சீனிவாச முதலியார் பல்லாவரம், அவர்கட்குக் கலைமன்றத்தார் நன்றி தெரிவிக்கின்றனர்.

———

# மதிப்புரை

## அப்பர் பெருமான் வாழ்வும் வாக்கும்

[பதிப்பாசிரியர்: முதல்வர். அரு. இலக்குவன், எம். ஏ., மேலையூர் பூம்புகார்ப் பேரவைக் கல்லூரி வெளியீடு. விலை. ரூ. 24.]

இந் நூல் ஏறத்தாழ ஆயிரம் பக்கங்களை யுடையது. சைவப் பயிர் வளர்த்த தனிப் பெருந்தலைவர் அப்பர் பெருமானின் வாழ்க்கையை விளக்கும் பெரிய புராணப் பாடல்கள் பொழிப்புரையுடனும், அவர் பாடிய தேவாரப் பாடல்கள் குறிப்புகளுடனும் கொடுக்கப்பட்டுள்ளன. மிகுந்த பொருட் செலவில், செவ்விய முறையில் வெளியிட்டிருப்பது பாராட்டுக் குரியது. தென்னாட்டு மடங்களின் தலைவர்கள், அறநிலையத் துறை ஆணையர், திருமுருக கிருபானந்தவாரியார் முதலாகப் பேரறிஞர் பலரின் வாழ்த்துரைகளுடன் கூடிய இந்நூல் சைவமெய்யன்பர் இல்லந் தோறும் இருக்க வேண்டியதாகும்.

## தமிழகக் கவின் கலை—மாட்சி

[ஆசிரியர்: செ. வைத்தியலிங்கன், எம். ஏ., எம். லிட்., தமிழ்ப் பேருரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

கிடைக்குமிடம்: சை. சி. நூற்பதிப்புக் கழகம், லிட். 79, பிரகாசம் சாலை, சென்னை-1. விலை ரூ. 9.00]

மனிதனின் அழகுணர்ச்சியை, ஓவியம், சிற்பம், இசை, கூத்து என்ற வற்றிலெல்லாம் வெளிப்படக் காண்கிறோம். அழகுணர்ச்சி ஓர் இனத்தின் அறிவாற்றலையும், நாகரிகத்தையும் எடுத்துக்காட்டும் சின்னமாகும். தமிழகம் பண்டுதொட்டு நாகரிகத்தில் முன்னேறி வந்துள்ளது என்பதற்கு இங்குள்ள திருக்கோயில்களும், சிந்தாமணி, மணிமேகலை, பெருங்கதை போன்ற இலக்கியங்களில் இடம் பெறும் கவின் - கலைகளும் எடுத்துக் காட்டுகளாகும். இவற்றையெல்லாம் ஆசிரியர் 14 தலைப்புகளில் விளக்குந்திறம் பாராட்டற்குரியது.

## இரவிவர்மா

[ஆசிரியர்: வித்தகன். பக்கங்கள்: 132. விலை ரூ. 3-50. வித்தகன் வெளியீடு, அயனாவரம், சென்னை—600023.]

ஓவியர்மணி இரவிவர்மாவைத் தெரியாதவர் இந்தியாவின் எப் பகுதியிலும் இரார் எனலாம். அவருடைய புகழ்பெற்ற ஓவியங்களின் அச்சுப்படிகள் ஒவ்வோர் இல்லத்தையும் அணி செய்கின்றன. கலை மகளாயினும் இரவிவர்மாவின் ஓவியத்தை மனத்தில் கொண்டே அன்பர்கள் வணங்குகின்றனர். அவை அத்தனை ஆழமாக மக்கள் உள்ளத்தில் பதிந்துவிட்டன. பொதுமக்கள் வாக்கெடுப்பில் இரவி வர்மா முன்னணியில் இருக்கின்றார். எனினும் அவருடைய ஓவியங்களைக் குறை கூறுவோரும் இல்லாமல் இல்லை. பொறாமை காரணமாய் இரவிவர்மாவின் ஓவியங்களை விந்திய மலைக்கு வடக்கிலுள்ளோர் குறைகூறித் தவறான கருத்தைப் பரப்பினர் என்றுகூடக் கொள்ளலாம்.

இரவிவர்மாவின் ஓவியங்களைக் கண்டுகளிக்கும் பொதுமக்களுக்கு உதவும் வகையில் எழுதப்பட்ட இந்நூல் வரவேற்கத்தக்கது. ஓவியங் களின் புகைப்படங்கள் இணைக்கப்பட்டுள்ளன. இரவிவர்மாவின் வாழ்க்கை வரலாறும் இந்நூலில் இடம்பெற்றுள்ளது. ஆசிரியரின் நன்முயற்சி பாராட்டுக்குரியதாகும். உலகப்புகழ் பெற்ற ஓவியரின் கைவண்ணத்தைத் தருவி ஆராய இந்நூல் மக்களைத் தூண்டும்.

க. சி. கமலையா

---

தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்திற்காக
சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிட்.

பதிவு எண் M 4899.

# கழகப் புதிய வெளியீடுகள்

## தமிழ்ப் புலவர் வரிசை - 31 ஆம் புத்தகம்

**ஆசிரியர் :** கருப்பக்கிளர், சு. அ. இராமசாமிப் புலவர்

இப் புத்தகத்தில், முனைவர் மு. வரதராசனார் முதல் ந.சுப்ப ராய பிள்ளை ஈறாக 21 புலவர் பெருமக்களின் வரலாறுகள் கொடுக்கப்பட்டுள்ளன. வாழ்க்கை வரலாறுகள் எழுதும் ஆராய்ச்சியாளர்கட்கு இந்நூல் பெரிதும் பயன்படும். நூலகங்கள் தோறும் இருக்கவேண்டிய வரலாற்று நூல். ரூ. 5 00

## நாட்டுப்புறப் பாடல்கள் - திறனாய்வு

**ஆசிரியர் :** முனைவர் ஆறு அழகப்பன்

ஏட்டில் எழுதாக் கவிதைகளாக நாட்டுப்புற மக்களிடையே நடமாடிவரும் குழந்தைப் பாடல்கள், பக்திப் பாடல்கள், தொழிற்பாடல்கள், கொண்டாட்டப் பாடல்கள், நகைச்சுவைப் பாடல்கள், உணர்ச்சிப் பாடல்கள் ஆகியவற்றை அரிதின் முயன்று தொகுத்துள்ளார் இந் நூலாசிரியர். எல்லாரும் படித்து இன்புறும் வண்ணம் நூலகங்களில் இந் நூல் இடம் பெறவேண்டியது மிக மிக இன்றியமையாததாகும். ரூ. 11 00

## ஆதித்தநல்லூரும் பொருநைவெளி நாகரிகமும்

**ஆசிரியர் :** நுண்கலைச் செல்வர். அ. இராகவன்

மொகஞ்சதாரோ-அரப்பா அகழ்வாராய்ச்சிகட்கு ஒப்ப வைத்து எண்ணத்தக்கது தமிழ்நாட்டிலுள்ள ஆதித்த நல்லூர் அகழ்வாராய்ச்சியாகும். வரலாற்றாசிரியர்கட்குப் பெரிதும் பயன்படக்கூடியது. விளக்கப்படங்களுடன் கூடிய அழகிய பதிப்பு. ரூ. 12 00

## நீதியும் சமயமும்

நீதியும் சமயமும் இணைந்தே வாழ்க்கைக்குப் பயன்படுவன. எனவே அவ்விருவகை நூல்களை அன்பர்கள் படித்துப் பயன்பெற, கீழ்க்காணும் நூல்கள் துணைசெய்யும்.

1. திருக்குறள், 2 நாலடியார், 3. மூவர்தேவாரத் திரட்டு, 4 திருவாசகம், திருக்கோவையார் திரட்டு, 5. திருவிசைப்பா திருப்பல்லாண்டு — பெரிய புராணம், (9 - 12 திருமுறைத் திரட்டு) 6. திருப்புகழ்த் திரட்டு, 7. தாயுமானவர் பாடல்கள், 8. பட்டினத்துப் பிள்ளையார் பாடல்கள், 9. திருவருட்பாப் புகழ்த்திரட்டு ஆகிய ஒன்பது நூல்கள் அடங்கிய அழகிய தொகுப்பு.

அழகிய பெட்டியுடன் விலை ரூ. 75 - 00

குறைந்த விலை ரூ. 50 – 00

அப்பர் அச்சகம், சென்னை - 1.